# இன்றைய அரசியல் நிலைமையும் நமது கடமையும்





இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

தமிழ்நாடு கமிட்டி

ஆக. 1953] சென்னை-14 [விலை 4 அணா

# இன்றைய அரசியல் நிலைமையும் நமது கடமையும்

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி, மார்ச் '53ல் கூடி பின்வரும் தீர்மானத்தை அங்கீகரித்தது. கல்கத்தாவில் சென்ற ஆண்டு டிசம்பரில் கூடிய விரிவாக்கப்பட்ட பிளீனம் கூட்டத்தில் நடந்த விவாதம், அதற்குப் பிறகு மத்தியக் கமிட்டியில் நடந்த விவாதங்களின் அடிப்படையில் இத்தீர்மானம் அமைந்துள்ளது. இதை உடனடி வேலைக்கும், சீக்கிரமே நடக்கவிருக்கும் கட்சி மகாநாடுகளில் விவாதிப்பதற்கும் அடிப்படையாகக் கொள்ள வேண்டும்.

**— மத்தியக் கமிட்டி.**

1. 1952-ம் வருடம் அக்டோபர் முதல் வாரத்தில், தோழர் ஜோசப். ஸ்டாலின் எழுதிய **"சோவியத் யூனியனில் சோஷலிஸத்தின் பொருளாதாரப் பிரச்னைகள்"** என்ற மகோன்னத இலக்கியம் வெளியாயிற்று. இந்நூல், உலக நிலைமைபற்றியும், சோஷலிஸ்ட் சமூகத்திலும், இன்றைய முதலாளித்துவ சமூகங்களிலும் இயங்கி வரும் அடிப்படை விதிகளைப் பற்றியும், நம்முன்னுள்ள கடமைகள் பற்றியும், அக்கடமைகளை எம்முறையில் நிறைவேற்ற வேண்டும் என்பதைப் பற்றியும், சர்வதேசத் தொழிலாளிவர்க்க இயக்கத்திற்கு தெட்டத் 'தெளிவான பார்வையை அளித்துள்ளது. இதற்குப் பிறகு நடந்த சம்பவங்கள், இந்நூலில் ஸ்டாலின் செய்துள்ள ஆராய்ச்சிகளும் முடிவுகளும் ,இதேபோல் இந்நூலினால் வழிகாட்டப்பட்டு இந்நூலை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட சோவியத் கம்யூனிஸ்ட்

கட்சியின் 19வது காங்கிரசின் தஸ்தாவேஜுகளில் காணப்படும் ஆராய்ச்சிகளும் முடிவுகளும் முற்றிலும் பிழையற்றவை என்பதை மகோன்னதமான முறையில்நிரூபித்துக் காட்டிவிட்டன.

2. சோஷலிஸ்ட் உலகத்தின் ஒற்றுமை மேலும் பலமடைந்து அதன் சக்தி இன்னமும் அதிகமாக உயர்ந்துவிட்டது. சோவியத் யூனியன் கம்யூனிஸப் பாதையில் மேலும் முன்னேறி யிருக்கிறது. மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின் விடுத்துச் சென்ற பணியை பிரமாதமாக நிறைவேற்றியவரும், முற்போக்கு மனித சமுதாயத்தின் அரும் பெரும் தலைவருமான தோழர் ஸ்டாலினின் மரணத்தின்போது, உலக முழுதும் ஆராத்துயரத்தில் ஆழ்ந்தது. இது சோஷலிஸ்ட், ஜன நாயக சக்திகளின் சகோதரத்துவ ஒற்றுமையையும், சோஷலிஸம், ஜனநாயகம், சமாதானத்திற்கான போராட்டத்தை பலப்படுத்துவ தற்கும், மறைந்த நம் தலைவரின் லட்சியத்தை நிறைவேற்றுவதற் கும் சோஷலிஸ்ட், ஜனநாயக சக்திகள் பூண்டுள்ள உறுதியையும் பிரமாதமாக வெளிப்படுத்தியது.

தீவிரமடைந்துவரும் முதலாளித்துவ நெருக்கடியின் நேரடி யான விளைவாக பிரிட்டனிலும் அமெரிக்காவிலும்கூட உற்பத்திக் குன்றியுள்ளது. சர்வதேச வர்த்தகத்தின் அளவும் குறைந்துள்ளது. ஏகாதிபத்ய முகாமிற்குள், மோதுதல்களும் முரண்பாடுகளும் இன்ன மும் அதிகமாகத் தீவிரமடைந்துள்ளன. ஐரோப்பிய இராணுவத்தை நிறுவுவதற்காக அமெரிக்கா விதித்த நிபந்தனைகள் அனைத்தையும் ஐரோப்பாவின் பூர்ஷுவா சர்க்கார்கள் அங்கீகரிக்கும்படிச் செய்ய அமெரிக்காவால் முடியாமல் போனது—பிரிட்டிஷ் காமன்வெல்த் மகாநாடும், அம்மகாநாடு காப்புவரியைக் (Tariffs) குறைக்கும்படி அமெரிக்காவுக்கு விடுத்துள்ள வேண்டுகோள்,—"அமெரிக்கா - நியூஜி லாந்து - ஆஸ்ட்ரேலியா பேச்சு வார்த்தைகளில்" பிரிட்டன் சேர்க் கப்படாமல் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது—ஆகிய இவற்றிலெல்லாம் ஏகாதிபத்திய முரண்பாடுகள் முற்றிவருவதற்குச் சான்றுகளைக் காண்கிறோம். கடந்த காலத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றிவந்த பல சார்பு நாடு களும் காலனி நாடுகளும், இன்று அந்நாடுகளின் வெகுஜனங்க ளுடைய நிர்ப்பந்தத்திற்குப் பணியவேண்டிய நிலையில் இருந்துவருவ துடன், வளர்ந்துவரும் பொருளாதார-அரசியல் நெருக்கடிகளின் காரணமாய் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை எதிர்த்துப் போராட ஆரம்பித்துள்ளதற்கான அறிகுறிகளையும் வெளிப்படுத்தி வருகின் றன. சிலோனுக்கும் சீனாவுக்குமிடையில் ஏற்பட்டுள்ள வர்த்தக ஒப் பந்தம், எகிப்திற்கும் சோஷலிஸ்டு நாடுகளுக்குமிடையில் ஏற்பட் டுள்ள வர்த்தக ஒப்பந்தங்கள், பொலிவியா சர்க்கார் டின் சுரங்கங்களை தேச உடைமையாக்கியுள்ளது, கோமிண்டாங் பிடாரிகளுக்கு எதிராக பர்மா எடுத்துள்ள நடவடிக்கைகள், பயமுறுத்தல்களுக்கு ஈரான்

பணிய மறுத்துள்ளது—ஆகிய இவையாவும் இன்று ஏற்பட்டுவரும் மாற்றங்களை ஓரளவு சுட்டிக்காட்டுகின்றன. மத்திய கிழக்கு பாது காப்பு அணியில் (MEDO), பாகிஸ்தானைச் சேர்ப்பதற்கு எடுக்கப்பட்ட முயற்சி குறித்து, நேரு கவலை தெரிவித்ததும், வட-அட்லாண்டிக் அணியை (NATO) அவர் கண்டித்ததும்கூட, காற்று எத்திசையில் வீசுகிறது என்பதற்கான முக்கியமான அறிகுறிகளாகும்.

3. வியத்நாமில் ஏற்பட்டுள்ளதுபோல், அடிமைப்படுத்தப்பட்டுள்ள நாட்டுமக்களின் விமோசன இயக்கம் புதிய வெற்றிகளை அடைந்துள்ளது; விரிவடைந்து முன்னேறியுள்ளது; உக்கிரமும் பெற்று தீவிரமடைந்துள்ளது. காலனி அமைப்புப் பூராவையுமே, இவ்வியக்கம் அடித்து நொறுக்கிக்கொண்டிருக்கிறது. அல்ஜீரியாவிலும், டுனிஷியாவிலும், மொரோகோவிலும் விடுதலைப் போராட்டம் தீவிரமடைகிறது; கென்யா மக்களின் போராட்டத்தை நசுக்க பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் எடுத்த முயற்சிகள் யாவும் வியர்த்தமாகியுள்ளன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குப் பணியாமல் தொடர்ந்து தலைநிமிர்ந்து நிற்கிறது மலேயா. தென் ஆப்பிரிக்காவில், மனித உரிமைகளுக்கான போராட்டம் நீடித்துவருகிறது. காலனி ஒடுக்கு முறைக்கு எதிரான போராட்டம் பரவிவருகிறது. இப்போராட்டம், காலனி மக்களின் சகல முற்போக்குப் பகுதிகளையும் தன் அணியில் சேர்த்துக்கொண்டு வருகிறது. பல நாடுகளில் தேசீய விடுதலை யுத்தத்தின் தன்மையை அது மேன்மேலும் அடைந்துவருகிறது. இதில் கம்யூனிஸ்ட் கட்சிகள் மென்மேலும் அதிகமான முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரத்தை வகித்து வருகின்றன. இந்தப் போராட்டம் ஜனநாயகம், சமாதானத்திற்கான உலகப் போராட்டத்துடன் மென்மேலும் நெருக்கமாகப் பிணைக்கப்பட்டு வருகிறது. மிகவும் துரிதமாக ஒவ்வொரு துறையிலும் சீனு அடைந்துள்ள முன்னேற்றம், ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளிலும், கலோனியல் உலகம் பூராவிலும், ஆழ்ந்த பலாபலன்களை ஏற்படுத்திவருகிறது.

4. உலக சமாதான இயக்கம் அடைந்துள்ள அபரிமிதமான வெற்றிகளும், இந்த இயக்கம் இடைவிடாமல் விரிவடைந்து முன்னேறிவருவதும் பீகிங் சமாதான மகாநாட்டிலும், வியன்னு சமாதான காங்கிரசிலும் உலகறியப் பிரகடனமாயின. இதுவரை நடத்தப்பட்ட சகல சமாதான மகாநாடுகளையும்விட மிகவும் அதிகமான பிரதிநிதித்துவம் வாய்ந்ததான இவ்விரு மகாநாடுகளின் பிரகடனங்களும், உலக வியாபகமான சமாதான ஆர்வத்தைப் பிரதிபலிக்கின்றன. இப்பிரகடனங்கள் இந்தியா உட்பட சகல நாட்டிலுள்ள சகல பகுதி மக்களின் வளர்ந்துவரும் ஆதரவைப் பெற்றுவருகின்றன. இந்தியாவிலுள்ள சமாதான இயக்கம் சமீப மாதங்களில் குறிப்பிடத்தக்க முன்னேற்றமடைந்துள்ளது. சகல கட்சிகளையும் சகல துறைகளையும் சேர்ந்த மக்கள் அதில் சேர்ந்துவருகின்றனர். மக்கள் சீனுவுக்கு எதிராக

கோமிண்டாங் துருப்புகளைத் தாக்குதலில் ஈடுபடுத்த அமெரிக்க ஏகாதிபத்தியம் எடுத்த முயற்சிக்கு உலக முழுதும் கண்டனம் எழுந்ததானது, வெகுஜனங்கள் மாத்திரமின்றிப் பல பூர்ஷ்வா சர்க்கார்களும் கூட, யுத்தத் தீயைப் பரப்பும் நோக்கம்கொண்ட நடவடிக்கைகளை ஆபத்தான நடவடிக்கைகள் என்று கருதுகின்றனர் என்பதையே எடுத்துக் காட்டுகிறது. கொரிய யுத்தத்தை நிறுத்துவதற்காக சீனப் பிரதமர்சௌ என்-லாய் தைரியமாகவும் துணிச்சலாகவும் முன்வைத்த ஸ்தூலமான யோசனைகளுக்கு உலக முழுதும் பேராதரவு தெரிவிக்கப் பட்டதினால், கடந்த ஒரு சில வாரங்கள் வரையில் ஆசியர்களை எதிர்த்து ஆசியர்களே போரிடும்படிச் செய்வதுபற்றி கொக்கரித்துக் கொண்டிருந்த அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளும்கூட இன்று அந்த யோசனைகளுக்கு மதிப்புக்கொடுத்து மீண்டும் பேச்சுவார்த்தைகளை ஆரம்பிக்கும்படியாயிற்று.

5. மேற்கூறியவற்றிலிருந்து, யுத்த அபாயம் தடுத்து நிறுத்தப் பட்டுவிட்டது என்றோ, ஏகாதிபத்தியவாதிகளின் யுத்தத் திட்டங்கள் கைவிடப்பட்டுவிட்டன என்றோ எண்ணக்கூடாது. மாறாக, யுத்த அபாயம் தொடர்ந்து இருந்துவருகிறது; யுத்தத் திட்டங்களும் தொடர்ந்து வகுக்கப்பட்டு வருகின்றன. சீனாவுடன் வர்த்தகம் செய்வதற்குத் தடை விதித்துள்ளதை மேலும் ஜரூராக அமுலாக்க எடுக்கப்பட்ட முயற்சி, வியத்நாமில் பிரஞ்சு ஏகாதிபத்தியவாதிகளுக்கு அமெரிக்க உதவி அதிகரித்திருப்பது, கென்யாவில் பிரிட்டிஷ்காரர்கள் மேற்கொண்டுள்ள ஈவிரக்கமற்ற நடவடிக்கைகள், ஐரோப்பிய நாடுகள் தமது "பாதுகாப்பு" தயாரிப்புகளை துரிதமாக பூர்த்தி செய்ய வேண்டும் என்று அமெரிக்கா கெடுபிடி செய்துவருவது, ஜனநாயக ஜெர்மனி, செக்கோஸ்லவாகியாவின் பிரதேசங்களில் பிரிட்டிஷ், அமெரிக்க விமானப்படைகள் நடத்திய ஆத்திரமூட்டும் செயல்கள், தொடர்ச்சியாக அணுகுண்டுப் பரிசோதனைகளை நடத்துவதன் மூலம் சமாதானம் விரும்பும் மக்களை பயமுறுத்த அமெரிக்கா மேற்கொண்ட முயற்சிகள் முதலியவற்றிலிருந்து ஏகாதிபத்தியவாதிகளின் யுத்தத் திட்டங்கள் கைவிடப்படவில்லை என்பது நன்கு தெரிகிறது. எனவே யுத்த அபாயம் இன்னமும் குறையவில்லை. சமாதானத்திற்கான போராட்டம், பிரதான கடமையாக இன்னமும் தொடர்ந்து இருந்து வருகிறது. எனவே, இக்கடமையை மேலும் அதிகமான விறுவிறுப்புடன் மேற்கொள்ளவேண்டியது அவசியமாகும். ஏனெனில் ஏகாதிபத்தியத்தின் நெருக்கடி மேலும் தீவிரமடைந்துவருகிறது என்பதையும், ஏகாதிபத்தியவாதிகளின் கொள்கைகள் படுதோல்வி அடைந்து வருவதினால் அவர்களின் கண்மூடித்தனமான வெறி இன்னமும் அதிகரித்துவருகிறது என்பதையும், நெருக்கடியை யுத்தத்தின் மூலம் தீர்த்துக்கொள்ளுவதற்கான முயற்சிகள் மேலும் அதிகரிக்கும் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.

அதேசமயத்தில், ஏகாதிபத்தியவாதிகளின் பாதையிலுள்ள தடைகள் அதிகரித்துள்ளன என்பதையும் அவர்களின் முகாமிற்குள் முரண்பாடுகள் மேலும் முற்றியுள்ளன என்பதையும், சார்புநாடுகள் மென்மேலும் எதிர்த்துப்போராட ஆரம்பித்துள்ளன என்பதையும், காலனி விடுதலை இயக்கம் பரவி மேலும் அதிக பலம் பெற்றுள்ளது என்பதையும், சமாதானத்திற்கான போராட்டம் அபரிமிதமான மக்கட் பகுதிகளின் ஆதரவைப் பெற்றுள்ளது என்பதையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். மேற்கூறிய இவை யாவும் கொரிய யுத்தத்திற்கு முடிவுகட்டுவதற்கும், சமாதான இயக்கம் மேலும் விரிந்து பரந்து வளருவதற்கும், ஏகாதிபத்திய முகாமிலுள்ள மிகவும் கண்மூடித்தனமான வெறிபிடித்தலையும் சக்திகளை தனித்துப் பிரித்து அவற்றின் யுத்தத் திட்டங்களைத் தோற்கடிப்பதற்கும் உள்ள சாத்தியப்பாடுகளை அதிகரிக்கச்செய்கின்றன என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்,

6. கொரியாவில் யுத்தம் நிறுத்தப்படுவது, அணுசக்தி ஆயுதங்களுக்கும் விஷக்கிருமி யுத்தத்திற்கும் தடைவிதிப்பது, வல்லரசுகளுக்கிடையில் சமாதான ஒப்பந்தம் ஏற்படுவது ஆகியவற்றால், உடனடியாக சர்வதேச நிலைமையிலுள்ள நெருக்கடி தளரும்; உலகத்தின் செல்வாதாரங்களும் வளங்களும் சமாதானப் பணிகளுக்கும் உலக வர்த்தகம் வளருவதற்கும் உபயோகப்படுத்தப்படுவதற்கான சந்தர்ப்பம் ஏற்படும். இந்திய மக்கள் உட்பட சகலநாட்டு மக்களும் தமது பொருளாதாரத்தை புனரமைத்துக்கொள்ள இது உதவும். வாழ்க்கைக்குத் தேவையான பண்டங்களின் விலைவாசிகள் படிப்படியாகக் குறைவதற்கும், இன்றுள்ள பட்டினி, பற்றாக்குறை, விலைவாசிகளின் ஏற்றம் ஆகியவற்றைக் குறைப்பதற்கும் இது பெருமளவுக்கு வகை செய்யும்.

7. சமாதானத்திற்கான இந்திய மக்களின் போராட்டம், இந்தியாவின் பரிபூரணமான சுதந்திரத்திற்கான போராட்டத்திலிருந்து பிரிக்க முடியாதபடி பிணைக்கப்பட்டுள்ளது. இந்தியாவின் பரிபூரண சுதந்திரம் என்பதற்கு முதலாவதாகவும் முக்கியமாகவும் அர்த்தமென்னவென்றால், இந்தியாவில் இன்னமும் தொடர்ந்து ஆதிக்க நிலையில் இருந்துவரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடியிலிருந்து இந்தியா விடுதலை பெறுவது என்பதேயாகும். பரிபூரண சுயேச்சை நாடு என்ற நிலையில்தான் உலக சமாதான லட்சியத்திற்கு இந்தியா பலன் தரத்தக்க முறையில் பங்காற்றமுடியும்; சுதந்திரத்திற்கும் ஜனநாயகத்திற்கும் உறுதியான அரணாக விளங்கமுடியும். பிரிட்டிஷ் காமன்வெல்தில் இந்தியா தொடர்ந்து அங்கம் வகித்துவருவதும், இந்தியாவின் இராணுவம், கடற்படை, விமானப்படைகளில் கேந்திரமான ஸ்தானங்களில் பிரிட்டிஷ் ஆபீஸர்களும் "அட்வைஸர்"

களும்'' இடம் பெற்றிருப்பதும், பாதுகாப்பு முஸ்தீப்புகள் என்றழைக்கப்படும் (ஏகாதிபத்திய—மொா-ர்) நடவடிக்கைகளில் இந்தியா பங்கெடுத்துவருவதும், பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தினுல் எழுப்பப்பட்ட கூர்க்கா துருப்புகளுக்கு பயிற்சி அளிப்பதற்கும் அவர்களது போக்குவரத்துக்கும் இந்திய மண்ணில் வசதிகள் அளிக்கப்பட்டுள்ளதும், நமது தேசத்தின் அரசுரிமைக்கு பங்கம் விளைவிக்கின்றன, கட்டுப்பாடுகள் விதிக்கின்றன என்பது மட்டுமல்ல; உலக சமாதானத்திற்கு அவை பெரும் அபாயத்தையும் ஏற்படுத்துகின்றன.

பிரிட்டன், ஒரு ஏகாதிபத்தியநாடு மாத்திரமல்ல, ஆக்கிரமிப்பு யுத்த அணியான வட அட்லாண்டிக் கோஷ்டியில் அது அமெரிக்காவின் பங்காளியுமாகும் என்பதையும், மலேய மக்களுக்கும் ஆப்பிரிக்க மக்களுக்கும் எதிராக அது யுத்தம் நடத்திவருகிறது என்பதையும் மறக்கக்கூடாது. மேலும் இந்தியப் பொருளாதாரத்தின் மீது பிரிட்டிஷ் பிடிப்பு இருந்து வருவதால் இந்தியா பிற்பட்ட நிலையிலும், ஏகாதிபத்தியத்தை சார்ந்து நிற்கவேண்டிய நிலையிலும் இருந்து வருகிறது. அமெரிக்க ஏகாதிபத்தியம் இந்தியாவிற்குள் ஊடுருவுவதற்கு இது உதவிகரமாய் இருக்கிறது; இந்தியாவிற்குள் ஏகாதிபத்திய அரசுகளுக்கிடையில் போட்டியும் மோதல்களும் ஏற்படுவதற்கு ஏற்ற நிலையை ஏற்படுத்துகிறது; யுத்தத்தில் இந்தியா இழுத்துவிடப்படும் அபாயத்தையும் அதிகரிக்கிறது. எனவே, காமன்வெல்திலிருந்து விலகுவதற்கும், இந்திய இராணுவத்திலிருந்து பிரிட்டிஷ் ஆபீஸர்களையும் 'அட்வைஸர்களையும்' வெளியேற்றுவதற்கும், பிரிட்டிஷ் மூலதனத்தை பறிமுதல் செய்வதன்மூலம் நமது பொருளாதாரத்தின்மீதுள்ள பிரிட்டிஷ் பிடிப்பை பரிபூரணமாக ஒழித்துக் கட்டுவதற்குமான போராட்டத்தை தீவிரப்படுத்தவேண்டியது அத்தியாவசியமாகும். மேற்கூறிய இந்தப் பிரச்சினைகளின் மீது பொதுவான இயக்கங்களை நடத்தும்போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் இந்தியா பிணைக்கப்பட்டுள்ளதையும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு அது அடிபணிவதையும் ஸ்தூலமான முறையில் வெளிப்படுத்தும் நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றையும் அம்பலப்படுத்தி, அதற்கு எதிராக மக்களைத் திரட்டவேண்டும். நடக்கப்போகும் பிரிட்டிஷ் ராணியின் முடிசூட்டு விழாவின்போது, அவ்விழாவில் இந்தியா கலந்துகொள்ளக்கூடாது என்று வெகுஜனக் கண்டன ஆர்ப்பாட்டத்தை நடத்தவேண்டும்.

8. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இந்தப் போராட்டத்தை நடத்தும்போது, சமாதானம், தேசிய அரசுரிமையின் பாதுகாப்பு ஆகியவற்றிற்கான போராட்டத்தின் பிரிக்க முடியாத பகுதி என்ற முறையில், பல்வேறு துறைகளில் மிகவும் துரிதமாக ஏற்பட்டுவரும் அமெரிக்க ஊடுருவலை எதிர்த்தும் இந்தியா போராடவேண்

டும். உலக யுத்தத்தைக் கட்டவிழ்த்து விடுவதன்மூலம் உலக ஆதிக்கத்தைப் பெற ஆசைக் கனவு கண்டுவரும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள், "உதவிகள்" உடன்படிக்கைகள் மூலமும் மிகவும் பிற்போக்கான சக்திகள், வலதுசாரி சோஷலிஸ்டுத் தலைவர்களுடன் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்வதன் மூலமும், இந்திய சர்க்காரைத் தமது பிடிப்பின்கீழ் கொண்டுவர முயன்றுவருகின்றன. ஊழல் களஞ்சியங்களாக விளங்கும் அரசியல்வாதிகளை அவர்கள் விலைக்கு வாங்கி வருகின்றனர்; பல செய்திப் பத்திரிகைகளின்மீது தமது பிடிப்பை ஏற்படுத்தி வருகின்றனர்; நமது மக்களின் கலாச்சார வாழ்க்கையை நசிவு இலக்கியம் சினிமாக்களின் மூலம் நச்சுப்படுத்தி வருகின்றனர். "ஜனநாயக ஆராய்ச்சிக் கழகம்" (Democratic Research Service), "ஆசிய சுதந்திரக் கழகங்கள்" (Freedom of Asia Societies) போன்ற ஏஜென்ஸிகளின் மூலம் சோவியத் யூனியன், புதிய சீன மக்கள் ஜனநாயக நாடுகளுக்கு எதிராக அண்டப் புளுகுகளையும் அவதூறுகளையும் வெகு தீவிரமாகப் பரப்பி வருகின்றனர். பெட்ரோல் போன்ற இந்தியப் பொருளாதாரத்தின் முக்கியமான துறைகளிலும் அவர்கள் ஊடுருவி வருகின்றனர்; கேந்திரத் தொழில்களிலும் அவர்கள் காலூன்ற முயன்று வருகின்றனர். ஏராளமான அமெரிக்க நிபுணர்கள் இறக்குமதி செய்யப்பட்டுள்ளனர். இந்த வேலைகளுக்குத் தகுதியான இந்தியர்களுக்குப் பஞ்சமில்லை. என்ற போதிலும் இவ்வாறு ஏராளமான அமெரிக்கர்கள் இங்கு இறக்குமதி செய்யப்பட்டு அவர்களுக்குக் கொள்ளை சம்பளம் அளிக்கப்பட்டு இராஜதந்திரிகளுக்கு அளிக்கப்படும் பாதுகாப்பும் அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தையும், "நிபுணர்கள்" என்ற வேஷத்தில் அமெரிக்க ஏஜெண்டுகள் இறக்குமதி செய்யப்படுவதையும் தீவிரமாக அம்பலப் படுத்தும் இயக்கத்தை நடத்தவேண்டும்.

9. சமாதானத்திற்கான போராட்டம், நமது தேசீய இயக்கத்தின் ஏகாதிபத்திய எதிர்ப்பு, ஜனநாயக பாரம்பரியங்களுடன் நேரடியாகப் பிணைக்கப்பட வேண்டும்; அதாவது அபிசீனியா, ஸ்பெயின், சீனாவின்மீது பாஸிஸ்ட் ஆக்கிரமிப்பு நடந்தபோது நமது தேசீய இயக்கம் கடைப்பிடித்த கொள்கையை, நமது தேசீய இயக்கத்தின் பாரம்பரியத்தை பிரதிநிதித்துவப்படுத்தும் அக்கொள்கையை, இந்திய சர்க்கார் இன்றும் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும் என்று கோரவேண்டும். கொரிய யுத்தம் சம்பந்தமாக இந்திய சர்க்கார் கடைப்பிடித்துவரும் கொள்கையை ஸ்தூலமாகவும், பரிபூரணமாகவும் அம்பலப்படுத்தவேண்டும். பிரதமர் சௌ யென்-லாய் சமாதான யோசனைகளுக்கு இந்திய சர்க்கார் பூரண ஆதரவு தர வேண்டும் என்ற கோரிக்கைக்குப் பின்னால், விரிந்த வெகுஜனங்களை உடனடியாகத் திரட்ட வேண்டியது அவசியம். யுத்தத்தை மேலும்

விளைவிக்கும் அபாயத்தை ஏற்படுத்தக்கூடிய ஏகாதிபத்தியவாதிகளின் முயற்சிகளுக்கு எதிராக மக்களைத் தட்டியெழுப்பினால் மட்டும் போதாது என்பதை தெட்டத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். கொரியாவில் யுத்தம் நீடித்து வரும் வரையில், யுத்தம் விஸ்தரிக்கப்படும் அபாயம், திடுதிப்பென்று யுத்த வெள்ளத்திற்குள் உலகம் மூழ்கடிக்கப்படும் அபாயம் ஒழிந்துவிடாது. எனவேதான், கொரியாவில் உடனடியாக யுத்த நிறுத்தத்தை ஏற்படுத்த இந்திய சர்க்கார் கோரவேண்டும் என்ற கோரிக்கைக்காக மக்களைத் திரட்டவேண்டியது அவசியமாகும். இதேபோல் மலேயாவிற்கும், வியத்நாமிய மக்களுக்கும் எதிராக பிரிட்டிஷ், பிரான்சு ஏகாதிபத்தியவாதிகள் நடத்தும் ஆக்கிரமிப்பு யுத்தத்திற்காக போக்குவரத்து வசதிகளை அளித்து வருவதை, இந்தியா நிறுத்தவேண்டும் என்பதற்காக மக்களைத் திரட்டவேண்டியதும் முக்கியமானதோர் கடமையாகும்.

சோவியத் யூனியன், மக்கள் சீனாவுக்கு எதிராக ஏகாதிபத்திய ஏஜெண்டுகளும், வலதுசாரி சோஷலிஸ்டுகளும் நடத்திவரும் விஷமப் பிரசார இயக்கத்தை எதிர்த்துப் போராடவேண்டும்; இந்த நாடுகளுடன் நேச அணி வகுப்பதற்காக பலம்வாய்ந்ததோர் இயக்கத்தை நடத்த வேண்டும். தோழர் ஸ்டாலினுக்கு இந்திய மக்களின் சகல பகுதிகளும் இஷ்டபூர்வமாகவும், தாமாகவும் செலுத்திய அஞ்சலி, சோவியத் யூனியனிடம் நமது நாட்டில் இருந்துவரும் நட்புணர்வு எவ்வளவு மகத்தானது என்பதை எடுத்துக்காட்டுகிறது. இந்த நட்புணர்வு, சமாதானம், ஜனநாயகத்திற்கான போராட்டத்திற்கு சக்திமிக்க ஆயுதமாகும். சோவியத் யூனியனுக்கும், சீனாவுக்கும் விஜயம்செய்து திரும்பிய பிரதிநிதிகள் இந்நாடுகளைப்பற்றிக் கூறியுள்ள புகழுரைகள் ஏகாதிபத்தியவாதிகள் யுத்தம் தொடுத்து அழிக்க முயலும் புதிய உலகத்திற்கு இந்திய மக்களிடமுள்ள நட்புணர்வைத் திரட்டி பலப்படுத்துவதற்குள்ள அபரிமிதமான வாய்ப்புகளை கட்டிக் காட்டுகின்றன.

10. சோஷலிஸ்டு, ஜனநாயக நாடுகளுடன் வர்த்தக உறவுகளை வளர்ப்பதற்கான போராட்டம், சமாதானம், தேச சுதந்திரம் ஆகியவற்றுக்கான போராட்டத்தின் பிரிக்க முடியாத பகுதியாகும். ஒரு பகுதி நாடுகளுடன் மட்டும் உறவுகொண்டுள்ள இந்திய வர்த்தகம், நெருக்கடிச் சுழல்கள் நிறைந்த பிரிட்டிஷ், அமெரிக்கப் பொருளாதாரத்துடன் பிணைக்கப்பட்டுள்ளதும், இந்த நாடுகள் இந்தியாவுக்கு பாதகமான முறையில் திணித்துவரும் சமத்துவமற்ற வர்த்தகமும் இந்தியப் பொருளாதாரத்தின் நெருக்கடி தீவிரமடைவதற்கும், மிகவும் தேவைப்படும் தொழில் வளர்ச்சிக்கான இயந்திரங்கள் கிடைக்காமல் போவதற்கும், நமது பிற்

கலோனியல் நிலைமைகள் சிரஞ்சீவித்துவம் பெறுவதற்குமே உதவுகின்றன. சோவியத் யூனியனுடனும், சீனவுடனும் வர்த்தக உறவுகளை வளர்த்துக் கொள்வதற்குத் தனக்கு "எவ்வித ஆட்சேபனையும்" இல்லை என்றும், இத்தகைய வர்த்தக உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டியது தனிப்பட்ட வர்த்தகர்களே என்றும் இந்திய சர்க்கார் பசப்புகிறது. ஆனால், உண்மை என்னவென்றால், சர்க்கார் மட்டத்தில் வர்த்தக ஒப்பந்தம் ஏற்பட்டால் அன்றி, ஒரு புறத்தில் இந்தியாவிற்கும், மறுபுறத்தில் சோஷலிஸ்டு, மக்கள் ஜனநாயக நாடுகளுக்கு மிடையில் பெருமளவில் வர்த்தக வளர்ச்சி ஏற்படுத்துவதென்பது சாத்தியமல்ல. இவ்வாறு சர்க்கார் மட்டத்தில் ஏற்பட்ட ஒப்பந்தமே, மக்கள் சீனவுக்கும், சிலோனுக்குமிடையில் ஏற்பட்டுள்ள வர்த்தக ஒப்பந்தமாகும். இது சிலோன் மக்களுக்கு அபரிமிதமான நன்மையைத் தந்துள்ளது. சிலோன் வர்த்தக மந்திரியின் தலைமையில் பீகிங்கிற்கு ஒரு வர்த்தக தூது கோஷ்டி விஜயம் செய்ததின் விளைவாக ஏற்பட்ட இந்த ஒப்பந்தம் பரஸ்பரம் இரு நாடுகளுக்கும் லாபகரமான அடிப்படையில் சீன அரிசியை சிலோன் தருவித்துக்கொள்வதற்கும், சீனவுக்கு சிலோன் ரப்பரை விற்பதற்கும் வகைசெய்துள்ளது. எனவேதான், சிலோன்-சீன ஒப்பந்தம்பற்றி விரிவான பிரசாரம் செய்யவேண்டியதும், இந்த ஒப்பந்தம் எப்படி ஏற்பட்டது என்பதைப்பற்றியும், இதில் வெகுஜன ஸ்தாபனங்களும், பொதுமக்களும் எத்தகைய பாத்திரம் வகித்தனர் என்பதையும் விளக்கவேண்டியதும் அவசியமாகும் ("நியூ ஏஜ்" 1953 மார்ச் மாத இதழைப் பார்க்கவும்).

11. உலக முதலாளித்துவ நெருக்கடி தீவிரமடைந்துவருவதாலும், முதலாளித்துவ உலக மார்க்கெட் குறுகிவிட்டதாலும், காலனி, சார்பு நாடுகளை ஏகாதிபத்தியவாதிகள் சுரண்டுவது தீவிரப்பட்டுள்ளது. காலனிகளிலும் சார்புநாடுகளிலும் ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கிடையில், பிரதானமாக பிரிட்டனுக்கும் அமெரிக்காவிற்குமிடையில், தீவிரமான மோதல்கள் ஏற்பட ஆரம்பித்துள்ளன. இந்தியா-பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கநிலை இன்னமும் தொடர்ந்து நீடித்துவரும் இந்தியா, அமெரிக்க ஏகாதிபத்தியம் துரிதமாக ஊடுருவிவரும் இந்தியா இத்தகைய ஏகாதிபத்திய போட்டா போட்டிகளும் மோதல்களும் நடக்கும் பிரதான தளங்களில் ஒன்றாக விளங்குகிறது.

12. இந்தியாவை பிற்பட்ட, சார்புநாடாக வைத்திருப்பதிலேயே கண்ணும் கருத்துமாகவுள்ள ஏகாதிபத்திய அரசுகளுடன் இந்தியாவின் வர்த்தகமும் பொருளாதாரமும் பிணைக்கப்பட்டுள்ளதின் விளைவாக இந்தியா ஈவிரக்கமின்றிச் சுரண்டப்படுகிறது, சூறையாடப்படுகிறது. இந்தியப் பொருளாதாரத்தின் கேந்திரமான துறை

களில் பிரிட்டிஷ் மூலதனம் ஆதிக்கம் செலுத்திவருவது, நாணய மாற்று பாங்கிகள், இன்ஷூரன்ஸ், கப்பல் கம்பெனிகளின் மீது பிரிட்டிஷ் கண்ட்ரோல், இறக்குமதி ஏற்றுமதி சாம்ராஜ்ய காப்புவரி சம்பந்தமாக சலுகைகள், ஸ்டர்லிங் கோஷ்டியில் இந்தியா அங்கம் வகித்து வருவது ஆகியவற்றின் மூலம் இந்தியாவின் செல்வத்தைப் பிரிட்டன் தொடர்ந்து உறிஞ்சிவருகிறது. இந்திய மக்களை மேலும் சுரண்டுவதற்கும், தொழில்வளர்ச்சிக்குத் தேவையான கன இந்திரங்களைக் கொடுக்க மறுப்பதற்கும், இந்தியத் தொழில்களை நாசப்படுத்துவதற்கும், சமத்துவமற்ற வர்த்தகம் என்னும் ஆயுதத்தை, பிரிட்டனும் அமெரிக்காவும் கையாண்டு வருகின்றன. இந்தியா ஏற்றுமதி செய்யும் உற்பத்தி பண்டங்களின் விலை செங்குத்தாக வீழ்ந்ததும், அதே சமயத்தில் பிரிட்டன், அமெரிக்காவிடமிருந்து இந்தியா இறக்குமதி செய்யும் உற்பத்திப் பண்டங்களின் விலைவாசிகள் இந்தியப் பண்டங்களின் விலைவாசிகள் வீழ்ந்த அளவுக்கு வீழாததும் மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிப் போக்கை தீவிரப்படுத்தியுள்ளது; விரிந்த வெகுஜனங்களை, குறிப்பாக அடிப்படை உற்பத்தியாளர்களான விவசாயி மக்களை படுநாசத்தில் ஆழ்த்தியுள்ளது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் மூலதனத்திற்கு வட்டி, லாபத் தொகைகளைச் செலுத்துவதற்காகவும், அமெரிக்காவிலிருந்து இறக்குமதியாகும் உணவுப் பொருள்கட்கும், இந்தியா வாங்கவேண்டியுள்ள இராணுவ தளவாடங்கள், ரெயில் இன்ஜின்கள், கோச்சுகள், இதர சாமான்களுக்கும் பணம் செலுத்துவதற்காகவும், மிகவும் படுமோசமான விலைக்கு ஏராளமான அளவு மூலப்பொருட்களை நாம் ஏற்றுமதி செய்யவேண்டியுள்ளது. இதனால் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்குமிடையிலுள்ள ஏற்றத் தாழ்வு மென்மேலும் அதிகரித்து வருகிறது; ஸ்டர்லிங் சேமிப்புகள் கரைந்துகொண்டே போகின்றன. அன்னிய வல்லரசுகளுடன் அண்டி நிற்கவேண்டிய நிலைமை அதிகரித்து வருகிறது. இவ்வாறு நமது பொருளாதாரம் பூராவும் பொடிந்து சரிந்து வருகிறது.

13. இந்தியாவின் பிரதான ஏற்றுமதிப் பொருள்களான சணலும், தேயிலையும் அபாயகரமான நிலைமையை எதிர்நோக்குகின்றன. பண்படுத்தப்படாத சணலின் விலை செங்குத்தாக வீழ்ந்ததினால், விவசாயிகள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளனர். முதலாளித்துவ நாடுகளில் தீவிரமடைந்து வரும் நெருக்கடியாலும், அந்நாடுகளின் பொருளாதாரத்துடன் இந்தியா பிணைக்கப்பட்டுள்ளதினாலும் சணல் ததிகளில் ஒரு பகுதி மூடப்பட்டுள்ளது. சணல் ஆலைகளில் பகுதி நேர வேலையே இருந்து வருகிறது; பெருவாரியான தேயிலைத் தோட்டங்கள் மூடப்பட்டும் விட்டன. இந்தத் தொழில்களில் ஆதிக்கம் செலுத்தும் பிரிட்டிஷ்காரர்கள், தொழிலாளிகளின் தலையில் பாரத்தை சுமத்துவதின் மூலம் நெருக்கடியை சமாளிக்க முயன்று வருகின்றனர்.

14. நெருக்கடி இந்தத் தொழில்களில் மாத்திரம் ஏற்பட்டு விடவில்லை; அனேகமாக ஒவ்வொரு தொழிலும்—குறிப்பாக நமது தொழில்களில் பெரும் பகுதியான தேவைபண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களில்—நெருக்கடி ஏற்பட்டுள்ளது. ஏகாதிபத்தியத்துடன் ஒத்துழைத்துவரும் நிலப்பிரபுக்கள், ஏகபோக முதலாளிகளின் பிடியின்கீழ் உள்ள இந்திய சர்க்கார், இந்தியப் பொருளாதாரத்தின் நெருக்கடி, **குறைவான-உற்பத்தி**யின் நெருக்கடி என்றும், போதிய சாமான்கள் இல்லாததினால்தான் பற்றுக்குறையிருக்கிறது என்றும், இந்தியாவின் சுபீட்சப்பாதை 'கடின வேலை'யில் உள்ளது என்றும், தேவைப்படுவதெல்லாம் கடின உழைப்பேயன்றி அடிப்படையான சமூக மாற்றங்கள் அல்ல என்றும் இது காலபரியந்தம் வாதாடி வந்தது. "உற்பத்தி செய் அல்லது உயிரைவிடு" என்பதே அவர்களின் கோஷமாக விருந்தது. பிரத்யட்ச உண்மைகளுக்கு முன்னால் இந்தக் கட்டுக்கதைகள் யாவும் தகர்ந்துகொண்டு வருகின்றன. இந்த நாட்டில் உபயோகிக்கப்படும் துணியில் மூன்றில் ஒரு பங்கை உற்பத்தி செய்த கைத்தறித் தொழில், சுமார் 1 கோடி தொழிலாளிகளை ஆதரித்துவந்த கைத்தறித் தொழில், இன்று உற்பத்தியான துணியை விற்கமுடியாததினால், அத்தொழிலே அழிந்துவிடும் நிலை ஏற்பட்டுள்ளது. கைத்தறித் தொழிலின் நசிவின் மூலமும், பிரம்மாண்டமான ஏற்றுமதிகளின் மூலமும் தன்னை நிர்வகித்துக்கொண்டிருந்த பெரும் நெசவாலைத் தொழில்களின் உற்பத்தி இன்னமும் 1938ம் வருடத்திய உற்பத்தி அளவைக்கூட எட்டிப்பிடிக்கவில்லை என்றபோதிலும், ஸ்டாக்குகள் விற்பனையாகாது குவிந்துள்ளதினால் இன்று நெருக்கடியான நிலைமையை எதிர்நோக்குகின்றன. 1938ல் நபர் ஒன்றுக்கு 16 கஜம் துணி வீதம் உபயோகிக்கப்பட்டதுபோல் இன்று இந்த அளவு 10 கஜமாக்க் குறைந்துள்ள நிலையிலும் இத்தகைய கஷ்டங்கள் ஏற்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. வேறு வார்த்தைகளில் சொல்லவேண்டுமென்றால், 1938ம் வருட உபயோக அளவை எட்டிப்பிடிப்பதற்கு வெகுதூரமிருக்கும்போதே "அதிக உற்பத்தி"யின் நெருக்கடிக்கான அறிகுறிகள் தென்படுகின்றன. சர்க்கரை, மிதிஅடி, கயிறு, இன்ஜினியரிங் முதலிய தொழில்களிலும் இன்னும் பல சிறிய, பெரிய தொழில்களிலும்கூட இதே நிலைமைதான் இருந்துவருகிறது.

15. யந்திரத் தொழிலாளிகளை மாத்திரமின்றி, நடுத்தரவர்க்க சிப்பந்திகளையும் பாதிக்கும் வெகுஜன வேலையில்லாத் திண்டாட்டமே, இன்றுசகல தொழிற்சாலை செண்டர்களின் விசேஷ அம்சமாகி வருகிறது. உயர்வான விலைவாசிகளையும், வேலைப்பளு அதிகரிப்பையும், ரேஷனலிசேஷனையும், கட்டாய லீவையும், பகுதி நேர வேலையையும், லாக்அவுட்டுகளையும், ஆட்குறைப்பையும் நிலைநாட்டுவதற்காக,

பிரிட்டிஷ், இந்திய ஏகபோக முதலாளிகள் உற்பத்தியைக் கட்டுப்படுத்தி வருகின்றனர். தொழிலாளி வர்க்கத்தின்மீது தாக்குதல் அதிகரித்துள்ளது. ஏற்றுமதித் தீர்வையை பெருமளவுக்குக் குறைப்பதின் மூலமும், சர்க்கரை ஆலை முதலாளிகளுக்கு சர்க்காரின் கஜானாவிலிருந்து $4\frac{1}{2}$ கோடி ரூபாயை நேரடியாக மான்யமாக வழங்கியுள்ளதின்மூலமும், கரும்பின் விலையைக் குறைத்ததின் மூலமும் சர்க்கார் பெரும் முதலாளிகளுக்கு பாதுகாப்பளித்து அபயம் தந்துள்ளது. அதே சமயத்தில் சர்க்கார், உணவு மான்யத்தை ஒழித்துவிட்டது; தேயிலைத் தோட்டத் தொழிலாளிகளுக்கு அளிக்கப்பட்டுவந்த மலிவு தான்ய சலுகைகளை ரத்துசெய்து விட்டது; மூலப் பொருட்களின் விலைகளை குறைவான அளவுக்குத் தாழ்த்துவதற்காகவேண்டி அறுவடை காலத்தில் ஒரேயடியாக விவசாயிகளுக்கு அளிக்கப்படும் கடன் வசதிகளைக் குறைத்துவிட்டது. உபயோகத்திற்கான தொழில் உற்பத்திப் பண்டங்களை மலிவான விலைகளுக்கு மக்கள் வாங்குவதற்கு வகைசெய்யும் நல்லதொரு விலைவாசிக் கொள்கையை அனுஷ்டிக்க சர்க்கார் மறுத்து வருகிறது. நமது நாட்டில் மூலதனம் போட்டுள்ள அன்னிய நாட்டு முதலாளிகள், சுதேசித் தொழில்களுடன் போட்டியிட்டு அவற்றை சாகடிக்க விடாமல் தடுப்பதற்கான நடவடிக்கைகளையும்கூட, சர்க்கார் மேற்கொள்ள மறுக்கிறது. அன்னிய சாமான்கள் தங்குதடையின்றி நம் நாட்டில் வந்து குவிவதற்கு அது அனுமதித்துள்ளது. இதனால் பல இந்தியத் தொழில்கள் நசித்து வருகின்றன. இவையாவும் நெருக்கடியை மேலும் முற்றி தீவிரமடையச் செய்கின்றன.

16 “அதிக-உற்பத்தி” நெருக்கடிக்கு நமது விவசாயப் பொருளாதாரத்திலுள்ள அபாயகரமான நெருக்கடியே அடிப்படையாகும். திட்டக் கமிஷனின் ரிப்போர்ட்டின்படியே, ஒரு ஏகர் நிலத்தில் உற்பத்தியாகும் உணவு தான்யங்களின் சராசரி அளவு செங்குத்தாகக் குறைந்துள்ளது. நாட்டின் பல பாகங்களில் பஞ்ச நிலைமைகள் சிரஞ்சீவித்துவம் பெற்றுவிட்டன. ஏராளமான பிரதேசங்களில் பற்றாக்குறை நிலைமைகள் நிலவுகின்றன. வர்த்தகப் பயிர்களின் விலைவாசிகள் செங்குத்தாக வீழ்ந்துவிட்டதினாலும், கைத்தறி போன்ற இரண்டாந்தரத் தொழில்கள் நசித்துப் போய்விட்டதினாலும், விவசாயி மக்களின் துயரங்கள் அதிகரித்துவிட்டன. விவசாயிகளின் கடன்சுமை பூதாகாரமான அளவுக்கு உயர்ந்துவிட்டது. பற்றாக்குறை, பஞ்ச நிலைமைகளின் காரணமாக, பத்தாயிரக் கணக்கான விவசாயிகள், தமது நிலம், கால்நடைகள், தமக்கு சொந்தமான சகல தட்டுமுட்டு சாமான்களையும் மிகவும் அற்ப விலைக்கு விற்றுவிட்டனர் அல்லது விற்றுக்கொண்டு வருகின்றனர். அவர்களின் சொத்து சுதந்திரங்கள் பேராசை பிடித்த நிலப்பிரபுக்கள், கொள்ளை வட்டிக்

காரர்களின் கைக்கு மாறி வருகின்றன. இது போதாதென்று, சர்க்கார் பலாத்கார முறைகளைக் கையாண்டு, நிலவரி பாக்கியையும் கடன் பாக்கிகளையும் செலுத்த முடியாதுள்ள விவசாயிகளின் நிலங்களை ஏலத்தின்மூலம் விற்பனை செய்துவருகிறது.

வறுமையில் மேலும் மேலும் ஆழ்த்தப்பட்டுவரும் விவசாயி மக்கள் பணம் கொடுத்து உரம் வாங்கி, உபயோகிக்க முடியாமல் இருப்பதினால், ஏராளமான உர ஸ்டாக்குகள் ராஜ்ய, மத்திய சர்க்கார் டிப்போக்களில் குவிந்துள்ளதிலும், விவசாயத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைக் காணமுடியும். இதனால் விவசாயத்தில் மேற்கொண்டும் தேக்கமும், வீழ்ச்சியும் ஏற்படுகிறது.

மேற்கூறியவற்றின் காரணமாய் உள்நாட்டு மார்க்கெட் துரிதமாக சுருங்கிவிட்டது; பல இடங்களில் மார்க்கெட் பரிபூரணமாக சரிந்துவிட்டது. உற்பத்திக்குறைவின் விளைவாய், உணவு தான்ய விலைவாசிகள் அதிகமாகவே இருந்து வருவதும், பெரும்பான்மையான மக்கள் தமது வருமானத்தில் பெரும்பகுதியை உணவு தான்யங்களை வாங்குவதற்காக செலவிட்டுவருவதும், தேவைக்கான தொழில் உற்பத்திப் பண்டங்களின் விலைவாசிகள் மிகவும் உயர்ந்து இருந்துவருவதும், நெருக்கடியை மேலும் தீவிரப்படுத்துகிறது.

விவசாய நெருக்கடி ஒரு தேசீய நெருக்கடியாக வளர்ந்திருக்கிறது. இதன் விளைவாக நாட்டிற்கு உணவுப் பற்றாக்குறையும், தொழில்களுக்கு மூலப்பொருட்களின் பற்றாக்குறையும் ஏற்பட்டுள்ளது; ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்குமிடையிலுள்ள ஏற்றத்தாழ்வு அதிகரித்தவண்ணமிருக்கிறது; அன்னிய வல்லரசுகளை சார்ந்துநிற்பது அதிகரித்துள்ளது; நமது தேச சுதந்திரத்திற்கும் அரசுரிமைக்கும் அபாயம் அதிகரித்திருக்கிறது. நமது நாட்டிற்குள் ஆக்கிரமிப்பு ஏகாதிபத்திய வல்லரசுகள் ஊடுருவுவதற்கு அது உதவிபுரிந்துள்ளது.

17. இவ்வாறு, 6 வருட காங்கிரஸ் ஆட்சிக்குப்பிறகும், நமது நாட்டின் சரித்திரத்தில் எப்பொழுதும் இருந்துவந்துள்ளதுபோன்ற படுமோசமான நிலைமையே இருந்துவருகிறது. இந்த நிலைமை, பிரிட்டிஷ் காமன்வெல்த்தை விட்டுப் பிரிந்துவர மறுக்கும், பிரிட்டிஷ் மூலதனத்தை பறிமுதல் செய்ய மறுக்கும், அடிப்படையான விவசாய சீர்திருத்தங்களை மேற்கொள்ள மறுக்கும் நேரு சர்க்காரின் கொள்கையின் நேரடியான விளைவேயாகும். பிரமாதமாக பறைசாற்றப்பட்டுவரும் 5 வருடத் திட்டம் மேற்கூறிய இந்தக் கொள்கைகளை மாற்றி, புதிய கொள்கைகளை அமுலுக்குக் கொண்டுவரப்போவதில்லை. பழைய கொள்கைகளே தொடர்ந்து கடைப்பிடிக்கப்படும். அன்னிய ஏகாதிபத்தியவாதிகள், அவர்களுடன் ஒத்துழைத்துவரும் இந்திய ஏகபோக முதலாளிகள், நிலப்பிரபுக்களின் நலன்களுக்கு

சாதகமாகவும் மக்களுக்கு பாதகமாகவும் நெருக்கடியைத் தீர்ப்பதற்கான முயற்சியே இந்த 5 வருடத் திட்டம்.

18. மன்னர்கள், நிலப்பிரபுக்கள், ஏகபோக முதலாளிகளிடம் குவிந்துள்ள, குவிந்துகொண்டேயிருக்கும் பணத்தை சர்க்கார் திரட்ட மறுத்துள்ளதும், சமத்துவமற்ற வர்க்கத்தின் மூலமும், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் மூலதனத்திற்குக் கிடைத்துவரும் ஏராளமான லாபம் நாட்டைவிட்டு ஏற்றுமதி செய்யப்படுவதின் மூலமும், ஏகாதிபத்தியவாதிகள் இந்தியாவின் செல்வத்தை உறிஞ்சிவருவதைச் சர்க்கார் தடுக்க மறுத்துள்ளதும் - இந்தியத் தொழில்களும், விவசாயமும் துரிதமாக வளர்ச்சியடைவதற்கான உண்மையிலேயே பெரிய திட்டங்களை மேற்கொள்ளுவதை அசாத்தியமாக்கியுள்ளன. நமது நாட்டில் பலநூற்றாண்டுகளாக இருந்துவரும் பிற்பட்ட நிலையையும், தடைபட்டுப்போன வளர்ச்சியின் விளைவுகளையும் சமாளிப்பதற்கும், வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் பஞ்சத்தை எதிர்த்துப் போராடுவதற்கும், இத்தகைய துரிதமான வளர்ச்சிக்கான திட்டங்கள் உடனடித் தேவையாகும்.

19. முதலில் விவசாயத்தை அபிவிருத்தி செய்வதன் மூலமாக இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு உறுதியான அடிப்படையை ஏற்படுத்துவதற்கு ஐந்தாண்டுத் திட்டம் முயலுகிறது என்ற படாடோபமான வாய்ச்சவடாலை, கடந்த 2 வருட ஐந்தாண்டுத் திட்டத்தின் நடைமுறை பொய்ப்பித்துவிட்டது. நில உறவுகளில் அடிப்படையான ஜனநாயக மாறுதல்களைச் செய்ய இந்தத் திட்டம் மறுக்கிறது. இத்தகைய மாறுதல்கள்தான் விவசாய உற்பத்தி பெருகுவதற்குத் தடையாயுள்ள விலங்குகளை உடைத்துக் கோடிக்கணக்கான இந்திய விவசாயிகளின் ஆக்கல் சக்தியைக் கட்டவிழ்த்துவிடும். அந்தத் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டுள்ள நிலம் சம்மந்தமான கொள்கைகள், விவசாயிகளைப் பெரிய அளவில் நிலங்களை விட்டு வெளியேற்றுவதில் கொண்டுபோய் முடியும். ஏற்கனவே விவசாயிகளை வெளியேற்றிக்கொண்டுமிருக்கிறது. இவைகளினுடெல்லாம் விவசாயிகள் ஓட்டாண்டிகளாவது துரிதப்படுகிறது. ஏற்கனவே பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளால் யுத்த-பிற்காலப் புனரமைப்புத் திட்டங்களின் பகுதியாகத் திட்டமிடப்பட்டிருந்த சில நீர்ப்பாசனம் திட்டங்களைத் தொடர்ந்து நடத்துவதையும், அமுலுக்குக் கொண்டுவருவதையும் இத்திட்டம் தன்னுள் கொண்டுள்ளது. ஐந்தாண்டுத் திட்டத்திலுள்ள உபயோககரமான நீர்ப்பாசனத் திட்டங்களும்கூட, அதிகாரவர்க்க கையாலாகாத்தனத்தினுடும், லஞ்சம் ஊழல் மலிந்திருப்பதின் காரணமாகவும், அதிக செலவில் அமெரிக்க "நிபுணர்களை," வைத்துக்கொண்டிருப்பதின் காரண

மாகவும், இந்திய இன்ஜினீயர்கள், டெக்னீஷியன்கள் ஆகியோரின் திறமையை உபயோகப்படுத்திக்கொள்ள மறுப்பதின் காரணமாகவும், அவர்களுக்கு உற்சாகமூட்டி வளர்ப்பதற்கு மறுப்பதின் காரணமாகவும், அதிக பணத்தை விழுங்குகின்றன. ஆகவே அவைகளினால் பெரும்பான்மையான மக்களுக்கு ஒருவித நன்மையும் கிடைக்கப் போவதில்லை.

தொழில் அபிவிருத்தித்துறை பூராவையும் இந்தத் திட்டம் தனிப்பட்ட முதலாளிகளுக்கு விட்டுவிடுகிறது. ஆகவே, உள்நாட்டு மார்க்கெட் பிரச்சினைக்கு இது பரிகாரம் தேடுவதற்குப்பதிலாக, உண்மையில் நெருக்கடியைத் தீவிரப்படுத்துகிறது என்பதனாலும், மூலதனச் சரக்குகளுக்கு, முழுக்க முழுக்க, பிரிட்டிஷ், அமெரிக்க ஏகாதிபத்தியங்களையே சார்ந்து நிற்கிறது என்பதனாலும், உண்மையில், இத்திட்டத்தினால் எத்தகைய தொழில் வளர்ச்சியும் ஏற்பட முடியாது. மறுபுறத்தில், கடந்த 2 வருட காலமாக அத்திட்டம் செயல்பட்டு வந்திருப்பதின் அனுபவம், நமக்குத் தெட்டத் தெளிவாகக் காட்டுவதென்ன? இந்தக் கொள்கைகளால், இன்றுள்ள உற்பத்தித் திறமையைப் பூராவாக உபயோகப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவை தேக்கமடைந்து நிற்பதைத் தடுக்க முடியவில்லை. ஏற்கனவே உள்ள தொழில்கள் நாசமாகாமல் காப்பாற்றப்படவும் முடியவில்லை' இந்தத் திட்டத்தின்கீழ், ஏகாதிபத்தியவாதிகளும், ஏகபோக முதலாளிகளும், தொழிலாளிகளின்மீதும், நம் மக்களின்மீதும் இதர தொழில் முதலாளிகளின்மீதும் தங்களுடைய தாக்குதல்களைத் தீவிரப்படுத்துவதற்கு எவ்விதத் தடையும் இல்லை. நம் மக்களனைவரையும் திட்டமிட்ட ரீதியில் கொள்ளையடித்து ஏராளமான லாபம் பெறுவதற்கும் சம்பள உயர்வு இல்லாமல் செய்வதன் மூலமாகவும், பஞ்சப்படி, போனஸ் ஆகியவைகளை முடக்குவதின் மூலமாகவும், வேலைப்பளு அதிகரிப்பு, இன்னும் தொழிலாளிகளின் உழைப்பை இதர வழிகளில் கடுமையாக்குவதின் மூலமாகவும், கொள்ளை லாபம் பெறுவதற்குப் பரிபூரண உரிமையுண்டு.

இவைகளெல்லாவற்றிற்கும் மேலாக, இத்திட்டத்தை அமுல் நடத்துவதற்குத் தேவையான பணத்திற்கு, பொதுமக்களின்மீது அதிக வரிச்சுமைகளைப் போடுவது, வெளிநாடுகளிலிருந்து கடன் வாங்குவது; அதிக நோட்டுகள் அச்சடித்து பற்றாக்குறையை சரிக்கட்டுவது முதலிய முறைகளைக் கையாளுகிறார்கள். இவைகளின் காரணமாகவெல்லாம் சாதாரண மக்களின்மீது சுமைகள் இன்னும் அதிகமாகும். இந்தியப் பொருளாதாரத்தின்மீது, அன்னிய ஏகாதிபத்தியவாதிகள், இந்திய ஏகபோக முதலாளிகள் ஆகியோரின் பிடிப்பு அதிகமாகும்.

பல ராஜ்யங்களில், ஏற்கனவே எடுத்துக் கொள்ளப்பட்ட திட்டங்களை அமுல் நடத்துவதற்குக்கூடப் போதிய பணமில்லை என்ற

நெருக்கடி வந்துவிட்டது. ஏற்கனவே பலதிட்டங்கள் சம்மந்தமாக வேலை மந்தமாக்கப்பட்டுள்ளது. பல மைனர் நீர்ப்பாசனத் திட்டங்களெல்லாம் அடியோடு கைவிடப்பட்டுவிட்டன. இந்த நெருக்கடி மாகாண சர்க்கார்கள், மத்ய சர்க்கார் ஆகியவற்றின் பட்ஜெட்டுகளை பாதிக்கின்றன. ஏற்கனவே அந்த பட்ஜெட்டுகள் பற்றாக்குறை பட்ஜெட்டுகளாயுள்ளன. இந்த நெருக்கடியின் காரணமாக ரயில்வேக்களில் ஜனப்போக்குவரத்தும், சாமான் போக்கு வரத்தும் பெரிதும் குறைந்துவிட்டன. இதன் காரணமாக, இப்பொழுதுள்ள ஜனப் போக்குவரத்துக்கும், சாமான் போக்குவரத்துக்குமே நல்ல முறையில் வசதி செய்வதற்கான ரயில்வே புனரமைப்புத் திட்டங்களெல்லாம் கைவிடப்பட்டு விட்டன. ஒவ்வொரு துறையிலும் சர்க்கார், பழைய பிற்போக்குக் கொள்கைகளையே தொடர்ந்து கடைப்பிடித்து வருகின்றது.

சுதேச மன்னர் சமஸ்தானங்களை ஒழிக்கவும், மாகாணங்களை மொழிவாரி அடிப்படையில் புனரமைக்கவும் மறுத்து வருகிறது. இதனால் நாட்டின் ஒற்றுமை சீர்குலைந்து விடுமென்று இதற்கு கொண்டிச்சாக்கு கூறுகிறது. 'ஸி' பிரிவு ராஜ்யங்களுக்குப் பிரதிநிதித்வ சர்க்காரை ஏற்படுத்திக்கொள்ளும் உரிமையை வழங்க அது மறுத்து வருகிறது. கல்வி கற்பதற்கான செலவை அதிகரித்து வருகிறது. அதன் காரணமாக பல மாணவர்கள் படிப்பையே நிறுத்தி வருகிறார்கள். இதனால் ஏழை மக்களுக்குக் கல்வியின் பக்கத்திலேயே போகமுடியாமல் செய்துள்ளது. இந்தியாவிலுள்ள அன்னியக் கம்பெனிகள் இந்தியர்களை மோசமாக நடத்தவும், வெள்ளை சிப்பந்திகளைக் காட்டிலும் இந்திய சிப்பந்திகள் கீழ்த்தரமானவர்கள் என்று பாகுபாடு படுத்தவும் அது அனுமதிக்கிறது. ஹிந்து சட்டதிருத்த மசோதாவை சட்டமாக்குவதை ஒத்திப்போட்டு வருகிறது. ஏராளமான தொகைகளை ராணுவத்திற்கும் போலீசுக்கும் செலவழித்து வருகிறது. பெருமுதலாளிகளுக்கு மேலும் மேலும் சலுகை கொடுத்து வருகிறது. ஆனால் அதே சமயத்தில் மக்களின் வாழ்க்கை உயர்விற்குப் பணமில்லையென்று கையை விரிக்கிறது. தன்னுடைய திட்டங்களையும், ப்ராஜெக்டுகளையும் அமுல் நடத்துவதற்குப் பணம் வேண்டுமென்ற பெயரால் மக்களின்மீது அதிக சுமைகளை சுமத்தி வருகிறது. பொதுஜன எதிர்ப்பிற்கிடையிலும், அது பாதுகாப்புச் சட்டங்களை மீண்டும் உயிர்ப்பித்து வருகிறது. வங்காளத்தில் செய்ததுபோல், அரசியல் வழக்குகளை விசாரிக்க விசேஷக் கோர்ட்டுகளை ஏற்படுத்தி வருகிறது. சகல முறைகளும் தோல்வியடைந்த பின், புதிய சுமைகளைச் சத்தமின்றி ஏற்றுக்கொள்ள மக்கள் மறுத்து, போராட்டத்தில் எழும்போதெல்லாம் சர்க்கார் ஈவிரக்கமற்ற அடக்குமுறையைப் பிரயோகப்படுத்துகிறது.

20. சர்க்காரின் இந்தக் கொள்கைகளுக்கும், நடவடிக்கைகளுக்கும் எதிராகவும், நிலச்சுவான்தார்கள், ஏகபோக முதலாளிகள் ஆகியோரின் வளர்ந்துவரும் தாக்குதல்களுக்கு எதிராகவும், நெருக்கடியின் சுமையை மக்கள்மீது சுமத்தும் முயற்சிகளுக்கு எதிராகவும், கடந்த ஒரு வருஷகாலத்தில் வெகுஜன எதிர்ப்பு துரிதமாக வளர்ந்துள்ளது. இந்தக் காலகட்டத்தில் எண்ணற்ற போராட்டங்களும், வெகுஜன நடவடிக்கைகளும் ஏற்பட்டுள்ளன. 1947 ஆகஸ்டுக்குப் பின் எந்த சமயத்திலும் இல்லாதமுறையில் இந்தப் போராட்டங்கள் பரிமாணத்திலும், தீவிரத்தன்மையிலும் உயர்ந்தவையாயிருந்தன. பொருளாதாரப் பிரச்னைகள் காரணமாகவும், வரிச்சுமைகளை எதிர்த்தும் மட்டும் போராட்டங்கள் நடைபெறவில்லை. ஆனால் பிரஜா உரிமைகளுக்காகவும், மொழிவாரி மாகாணங்களுக்காகவும், மலிவான கல்விக்காகவும் போராட்டங்கள் நடைபெற்றன. இந்தப் போராட்டங்களில் கலந்துகொண்டவர்கள் தொழிலாளிகளும், விவசாயிகளும் மட்டுமல்ல; ஆனால் மாணவர்கள், ஆசிரியர்கள், ப்யூன்கள், நகர சுத்தித் தொழிலாளிகள், சர்க்கார் சிப்பந்திகள், போலீஸ்காரர்கள், வியாபாரிகள், ஆலைச் சொந்தக்காரர்கள் ஆகியோரும் பங்கெடுத்துள்ளனர். ஜனநாயக இயக்கம் இதுவரை பலஹீனமாயிருந்த சௌராஷ்டிரா போன்ற பிரதேசங்களிலும் போராட்டங்கள் வெடித்துவருகின்றன. அனேகமாக, ஒவ்வொரு போராட்டத்திலும், பரந்த வெகுஜன அனுதாபம், அப்போராட்டத்திற்கு இருப்பது தெரிந்தது. தொழிலாளி வர்க்கப் போராட்டங்கள் ஏராளமாக இருந்தன என்பதுமட்டுமின்றி, அவைகளில் பல போராட்டங்களில், ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்ட பல தொழிற்சங்கங்களைச் சேர்ந்த தொழிலாளர்களும், ஒன்ருக நின்று, ஒன்றுபட்டுப் போராடியுள்ளனர்.

கல்கத்தாவில் நடைபெற்ற வேலையில்லாத் தொழிலாளிகளின் பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம், பல்வேறு ஸ்தாபனங்களைச் சேர்ந்த தொழிலாளிகளையும் ஆகர்ஷித்தது. மக்களின் சகல பகுதியினரும் இந்த ஆர்ப்பாட்டத்தை ஆதரித்தனர். பல மாகாணங்களில் விவசாயிகள் விடாப்பிடியுடன் போராடிய பல சம்பவங்கள் ஏற்பட்டுள்ளன. இத்துடன்கூடவே, நகரங்களில் விவசாயிகளின் ஆர்ப்பாட்டங்களும் நடைபெற்றுள்ளன. தொழிலாளிகள், விவசாயிகள், மாணவர்கள் ஆகியோரின் வெகுஜன ஸ்தாபனங்கள் நாடெங்கும் வளர்ந்துவருகின்றன. பல இடங்களில் ஐக்கிய பாக்டரி கமிட்டிகள் ஏற்பட்டுள்ளன. ஐக்கிய பஞ்ச நிவாரணக் கமிட்டிகள் ஏற்பட்டதின் மூலமாகவும், ஒற்றுமைக்காக மக்கள் எவ்வாறு துடித்துக்கொண்டிருக்கிருர்கள் என்பது தெளிவாகிறது. வங்காளத்தில் எதிர்க்கட்சிகள் பல ஐக்கிய ஆர்ப்பாட்டங்களை நடத்தியுள்ளன. சட்டசபைகளில் கம்யூனிஸ்ட் உறுப்பினர்களும், இதர ஜனநாயக உறுப்பினர்களும் செய்யும்

பிரசங்கங்களிலும் சர்க்காருக்கு எதிரான பொதுஜன எதிர்ப்பு வெளிப்படுகிறது. அங்கே, பல காங்கிரஸ்காரர்களும்கூட, சர்க்காரின் பல நடவடிக்கைகளை விமர்சனக் கண்ணுடன் பார்க்க ஆரம்பித்திருக்கின்றனர்.

21. இன்று நடைபெறும் போராட்டங்களின் ஒரு விசேஷமான குணுதிசயம்—மக்களின் வாழ்க்கை நிலைமை மோசமாவதின் காரணமாக அந்தப் போராட்டங்கள் ஏற்படுகின்றன என்பது மாத்திரமல்ல; ஆனால், மக்களிடமிருந்து காங்கிரஸ், நாளுக்குநாள் எவ்வாறு அதிகமாகத் தனிமைப்பட்டுவருகிற நிலைமையிலும், அதனுடைய பொதுஜன செல்வாக்கு நாளுக்குநாள் குறைந்துவரும் நிலைமையிலும் நடைபெறுகின்றன. இதுவரையிலும் காங்கிரஸைப் பின்பற்றிவந்த ஏராளமான மக்களும், போராட்டங்களுக்கு அனுதாபம் காட்டுகின்றனர். அவைகளில் பங்கெடுக்கவும் செய்கின்றனர். ஆந்திராவில் நடைபெற்ற மொழிவாரி மாகாண இயக்கம், பம்பாயிலும் சௌராஷ்டிராவிலும் நடைபெற்ற விற்பனை வரி-எதிர்ப்பு இயக்கம் ஆகியவை இதற்கு சரியான உதாரணங்களாகும். பல மாகாணங்களில் காங்கிரஸ்காரர்கள் சர்க்காரின் புதிய வரிகளை எதிர்த்துள்ளனர். காங்கிரஸ் கமிட்டிகளுக்குள்ளே, சர்க்காரின் கொள்கைகளைப்பற்றிக் கடுமையான சண்டைகள் ஏற்பட்டுள்ளன. பிரஜா-சோஷலிஸ்டுக் கட்சியை சேர்ந்த பல அங்கத்தினர்கள் ஒன்றுபட்ட நடவடிக்கைகளில் கலந்துகொள்ள முன்வருகின்றனர். இக்கட்சியின் தலைமைப்பதவி, மார்க்ஸியத்தைப் பின்பற்றுவதென்ற சகல பாசாங்கையும் கைவிட்டுவிட்டது. ஒரு போராட்ட எதிர்ப்புக் கொள்கையைக் கையாளுகிறது, காங்கிரஸுடன் கூட்டுச் சேருவதற்கு முயற்சிசெய்துவருகிறது. அதனுடைய நிலைமை பலஹீனமடைந்துவருவதாலும், சர்க்கார் பல சமயங்களில் வெகுஜனக் கோரிக்கைக்கு விட்டுக்கொடுக்கவேண்டி ஏற்பட்டது. கொஞ்சம் பின்வாங்கி, தன்னுடைய வெகுஜன-எதிர்ப்பு நடவடிக்கைகளை அமுல் நடத்தாமல் நிறுத்தும் நிலைமை ஏற்பட்டது. இவ்வருடம் பிப்ரவரி, மார்ச் மாதங்களில் கொண்டுவரப்பட்ட பட்ஜெட்டுகளில்—சர்க்கார்களுக்கு பற்றாக்குறை அதிகரித்தபோதிலும், பொதுவாகப் புதிய வரிகள் போடப்படாததைப் பார்த்தோம். கடந்தவருடம் புதிய வரிகளுக்கு ஏற்பட்ட மிகப்பெரிய எதிர்ப்பே இதற்கு முற்றிலும் காரணமாகும். பல இடங்களில் அரசியல் கைதிகள்மீது விதிக்கப்பட்டிருந்த மரணதண்டனை ரத்துசெய்யப்பட்டது; தண்டப் போலீஸ் முகாம்கள் அகற்றப்பட்டன. அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டனர். பல ஸ்தலங்களில் தொழிலாளிகளும், விவசாயிகளும் பொருளாதாரத் தாக்குதலை எதிர்த்துப் பல சலுகைகளைப் பெற்றுள்ளனர்.

22. ஆழமாகிவரும் பொருளாதார நெருக்கடி: சர்க்காரின் கொள்கைகளால் மக்களின் நிலைமைகள் மோசமாகிவருவது, சர்க்கா

யின் கொள்கைகளுக் கெதிராக அதிகரித்துவரும் வெகுஜன எதிர்ப்பு ஆகியவைகளுக்கு ஆளும் வர்க்கத்திலும், அதன் கட்சியாகிய காங்கிரஸ் கட்சியிலும் எதிரொலிகள் ஏற்பட்டுள்ளன. வருமானங்களில் மத்திய சர்க்காருக்கும், மாகாண சர்க்கார்களுக்கும் எந்த விகிதாசாரத்தில் பங்கு கிடைக்க வேண்டுமென்பதில் முரண்பாடுகள் வளர்ந்து வருகின்றன. நிதிக்கமிஷனின் சிபார்சுகளின்படி, ராஜ்யங்களுக்குச் சேர வேண்டிய தொகை அதிகரித்திருந்தும், இந்த முரண்பாடுகள் தீரவில்லை. மொழிவாரி மாகாண அமைப்பு சம்பந்தமாக சர்க்காரின் பிற்போக்குக் கொள்கையாலும், ஆந்திர மக்கள் இப்பிரச்சினையில் அடைந்த குறிப்பிடத்தக்க வெற்றியாலும், மொழிவாரி மாகாண அமைப்பு இயக்கத்திற்குப் புதிய ஊக்கம் ஏற்பட்டுள்ளது. அதுமட்டுமன்றி, பல காங்கிரஸ்காரர்கள், காங்கிரஸ் தலைமையின் கொள்கையையும், சர்க்காரின் கொள்கையையும் பகிரங்கமாகக் கண்டிக்கவும் ஆரம்பித்துவிட்டனர். காஷ்மீரில் ராஜப்பிரமுகர் பதவி ஒழிக்கப்பட்டதின் பின்னால், இன்னும் இதர ராஜ்யங்களிலும் ராஜப்பிரமுகர்கள் பதவி ஒழிக்கப்பட வேண்டுமென்று காங்கிரஸ்காரர்களே மேலும் மேலும் அதிகமாகக் குரல் எழுப்ப ஆரம்பித்துள்ளனர். வெகு ஜனங்களிடையே வளர்ந்துவரும் அதிருப்தியின் காரணமாக, காங்கிரசுக்குள்ளே போட்டிக் கட்சிகளுக்கிடையில் விரோதங்கள் அதிகரித்து வருகின்றன. அதன் காரணமாக ஆளும் வர்க்கத்திலே ஊசலாட்டமும், வழவழாத் தன்மையும் அதிகரித்து வருகிறது.

23. இன்று நாம் பார்ப்பது ஒரு பொருளாதார நெருக்கடி வளர்ந்துவருவதை மாத்திரமல்ல; ஆனால் அதனுடன் கூடவே, ஒரு அரசியல் நெருக்கடி வளர்ந்துவருவதின் ஆரம்ப கட்டத்தையும் பார்க்கிறோம். ஆளும் வர்க்கத்திற்குள்ளேயும், காங்கிரசுக்குள்ளேயும் வளர்ந்துவரும் முரண்பாடுகள், வளர்ந்துவரும் அரசியல் நெருக்கடியின் அறிகுறிகளேயாகும். காங்கிரசால் கையாண்ட பல்வேறு நடவடிக்கைகள்-கட்டுப்பாடு ரத்து போன்ற தந்திரங்கள், சில்லரை சலுகைகள், ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலமும், 'கம்யூனிட்டி ப்ராஜெக்ட்ஸ்' முதலியன மூலமும் பிரமைகளை உண்டாக்கச் செய்த முயற்சிகள்-ஆகிய எல்லாம் தீவிரமாக அம்பலமாகி வருகின்றன. எதிர்காலத்தில் இதைச் செய்வோம், அதைச் செய்வோம் என்று நம்பிக்கை கொடுப்பதின் அடிப்படையில் பழைய முறையிலேயே ஆட்சி செலுத்த காங்கிரசுக்கு ஏற்கெனவே கஷ்டமாயிருக்கிறது. நெருக்கடி ஆழமாக ஆழமாக, சர்க்காரின் இன்றைய கொள்கைகளுக் கெதிராக வெகுஜன எதிர்ப்பு வளர வளர, எந்தக் கொள்கைகளைப் பின்பற்றுவது, அல்லது யாருடன் கூட்டுறவு கொள்வது முதலிய பிரச்னைகளில் முரண்பாடுகள் கூர்மையடையும்

24. ஆயினும், எல்லாப் பிரதேசங்களிலும், எல்லா ராஜ்யங்களிலும் காங்கிரசின் செல்வாக்குப் பலஹீனமடைந்திருப்பதற்கு ஏற்ப

ஜனநாயக சக்திகளின் பலம் அதிகரிக்கவில்லை. இந்தியாவின் பல பாகங்களில் ஜனநாயக சக்திகள் பலஹீனமாக உள்ள பிரதேசங்களில் கிலப்பிரபுத்துவ பிற்போக்குச் சக்திகளுடன் கூட்டணி கொண்டு வகுப்புவாதக் கட்சிகளும் கொஞ்சம் பலம் பெற்றுள்ளன. அவை வெகுஜன அதிருப்தியை, இயக்கத்தையே பிளவுபடுத்தும் துறைகளில் செலுத்த முயற்சி செய்துவருகின்றன. பாகிஸ்தானுக்கு எதிராக நடவடிக்கையிலிறங்கவேண்டும் என்ற படோடோபமான கோஷத்தின் கீழ், பாகிஸ்தானின் வகுப்புவாதக் கொள்கைகளுக் கெதிராக மக்களிடமிருந்த ஆத்திரத்தை அவர்கள் பயன்படுத்திக்கொண்டனர்.

• இந்தியாவின் ஒற்றுமை பாதிக்கப்படக்கூடாது என்று மக்கள் மனோபாவம் கொண்டிருப்பதைப் பயன்படுத்திக்கொண்டு அவர்கள், "காஷ்மீர் தன்னுடைய எல்லைக்குள் ஒரு சுயேச்சையான அரசாங்கமாக இருப்பதென்பது இந்த ஒற்றுமையைப் பிளவுபடுத்துவதாகும்" என்று கூறி, மக்களிடையே குழப்பத்தை உண்டாக்கி, "காஷ்மீர் முழுக்க முழுக்க இந்திய யூனியனுடன் இணைந்துவிட வேண்டும்" என்ற கோஷத்தின்கீழ், காஷ்மீர் மக்களின்மீது, மீண்டும் மஹாராஜாவின் ஆட்சியை வலுக்கட்டாயமாகச் சுமத்துவதற்கும், விவசாய சீர்திருத்தங்களை ஒழித்துவிடுவதற்கும் முயற்சி செய்கிறார்கள்.

இந்த வகுப்புவாதப் பிற்போக்காளர்களின் நடவடிக்கைகள் ஒரு பெரிய ஆபத்தாக மாறியுள்ளன. இதைக் குறைத்து மதிப்பிடக் கூடாது. சர்வதேசீயத் துறையிலும், தேசீயத் துறையிலும் இன்னும் மகா பிற்போக்கான கொள்கைகளைச் சர்க்காரின்மீது திணிக்கும் முறையில், ஒரு எதிர்ப்புரட்சி தன்மைவாய்ந்த பெரிய திட்டங்களையெல்லாம் அவர்கள் வைத்திருக்கிறார்கள். காங்கிரசுக்குள்ளே அவர்களுக்கு அனுதாபமான பகுதிகள் இருக்கின்றன. வெகு ஜனங்களின் வளர்ந்துவரும் எதிர்ப்பைக்கண்டு நடுங்கும் அந்தப் பகுதிகள், ஜனநாயக இயக்கத்திற் கெதிராக ஒரு "ஐக்கிய முன்னணி"யைக் கட்டுவதற்காக, வகுப்புவாதப் பிற்போக்காளர்களுடன் காங்கிரஸ் ஒரு சமரசம் செய்துகொள்ள வேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர், வகுப்புவாதக் கட்சிகளைக் கொஞ்சமும் விட்டுக்கொடுக்காமல் பரிபூரணமாக அம்பலப்படுத்துவது, முற்போக்கான கருத்துக்களுடைய காங்கிரஸ்காரர்களுட்பட சகல ஜனநாயக சக்திகளையும் கொண்ட ஐக்கிய முன்னணி கட்டுவது, ஆகியவைமூலம், இந்தப் பிற்போக்காளர்களால் நடத்தப்படும் "இயக்கங்களி"லிருந்து மக்களை அப்புறப்படுத்த வேண்டும். இவ்வாறு செய்து, இந்த வகுப்புவாதப் பிற்போக்காளர்களால் ஏற்படும் ஆபத்தை எதிர்த்துப் போராடவேண்டும்.

25. பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியுடன் ஒரு கூட்டணி ஏற்படுத்திக்கொள்ளும் நோக்கத்துடன் பண்டிட் நேரு, ஜயப்பிரகாஷுடன் சமீப காலத்தில் ஆரம்பித்த பேச்சு வார்த்தைகள் ஆளும் வர்க்கங்க-

ளிடையிலே வளர்ந்து வரும் நெருக்கடியின் விளைவேயாகும். ஒரு வருஷத்திற்கு முன்புதான், கூட்டணி ஏற்படுத்திக் கொள்ளும் கருத்தை எதிர்த்து நேரு காரசாரமாக சண்டப் பிரசண்டம் செய்தார். காங்கிரஸ் மாத்திரம்தான் நாட்டைப் பிரதிநிதித்வப் படுத்துகிறது என்றார். ஆனால் இப்பொழுது அவரே முன்முயற்சி எடுத்து கூட்டணிக்கான பேச்சுவார்த்தைகளைத் துவக்கினார். இதற்குக் காரணம், காங்கிரசினுடைய செல்வாக்கும், அதனுடைய வெகுஜன அடிப்படையும் மேலும்மேலும் பலஹீன மடைந்து வருகிறது என்று அவர் உணர்ந்து கொண்டதேயாகும்.

தன்னுடைய செல்வாக்கு பலஹீனமடைந்து வருவதைத் தடுப்பதற்காக தான் கையாண்ட தந்திரங்களில் காங்கிரஸ் தோல்வியடைந்து விட்டதால், ஜனங்களுக்கெதிராகவும், ஜனநாயக இயக்கத்திற் கெதிராகவும் தன்னுடைய பிற்போக்கான கொள்கைகளைத் தொடர்ந்து நடத்துவதற்காகத் தன்னுடைய செல்வாக்கை விரிவு படுத்துவதற்கு செய்யப்பட்ட முயற்சியே இது.

பிரஜா சோஷலிஸ்ட் தலைமையும் அத்தகைய ஒரு பிற்போக்குக் கூட்டணியை ஏற்படுத்திக்கொள்ள ஆவலாயிருக்கிறது. ஏனெனில் அதற்கும் ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. பிரஜா கட்சியையும், சோஷலிஸ்ட் கட்சியையும் இணைத்தது போன்ற அதனுடைய சகல தந்திரங்களும், அந்த நெருக்கடியைத் தீர்ப்பதற்கு பதிலாக அதிகரிக்கவே செய்துள்ளன. ஒரு திட்டத்தை முன் வைப்பதின் மூலம், அது தன்னுடைய பிற்போக்கான நோக்கங்களை மூடி மறைக்க முயலுகிறது. நஷ்ட ஈடின்றி நிலச்சுவான்தாரி முறையை ஒழிக்க வேண்டுமென்று அது கூறுவதில்லை. நிலத்தை விவசாயத் தொழிலாளிகளுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் பங்கிட்டுக் கொடுக்கவேண்டுமென்று அது கூறுவதில்லை. குத்தகை குறைக்க வேண்டுமென்றோ, விவசாயிகளுக்கு நில பாத்யதை உரிமை கொடுக்க வேண்டுமென்றோ அது கூறுவதில்லை. அதற்குப் பதிலாக, அது, நிர்பந்தமாக நிலங்களை ஒன்று சேர்க்க வேண்டுமென்று கூறுகிறது. இதன் மூலம் ஏற்படப் போவது, விவசாயிகள் பெருவாரியாக நிலங்களிலிருந்து வெளியேற்றப்படுவதும், சிறுநில விவசாயிகளிடமிருந்து, அந்த நிலம் பறிமுதல் செய்யப்படுவதுமே. தொழிற்சங்கங்களை அங்கீகரிக்கவேண்டுமென்று அது வற்புறுத்தவில்லை. ஆனால், சர்க்காரின்கீழ் தொழிற்சங்கங்களெல்லாம் கட்டாயமாக ஒன்றாக இணைக்கப்பட வேண்டுமென்று கூறுகிறது. குறைந்தபட்ச சம்பளம், ஆட்குறைப்பைத் தடுப்பது, வேலையில்லாக் காலத்திற்கு நிவாரணம், ஆகியவைகளை அது கோருவதில்லை. ஆனால் அதற்கு மாறாக, தொழிற்சங்கங்கள் சமூகப் பொறுப்பு வாய்ந்த ஏஜென்ஸிகளாக மாறவேண்டு மென்று கூறுகிறது. மொழி வழி. ராஜ்யங்களையோ, மாகாணங்களுக்கு அதிக சுயாட்சி கொடுக்க வேண்டுமென்றோ அது கோருவதில்லை. அதற்கு மாறாக, மொழியின்

அடிப்படையிலுள்ள யூனிட்டுகள், நிர்வாக சௌகரியம், நிதி, பொருளாதார சௌகரியங்கள் ஆகியவைகளையும் கணக்கிலெடுத்துக்கொண்டு ஏற்படவேண்டுமென்கிறது. மேலும் பிரதேச (பல மொழி இனங்களுள்ள) கவர்னர்கள், பிரதேச ஹைகோர்ட்டுகள் முதலியன ஏற்படவேண்டுமென்று அது கோருகிறது. அடக்குமுறைச் சட்டங்களை ரத்து செய்வதைப்பற்றி அது வாய்திறப்பதில்லை.

காங்கிரஸ், மக்களுக்குக் கொடுத்த சகல வாக்குறுதிகளையும் குப்பைத் தொட்டியில் எறிந்துள்ளது. அதைக்கொண்டு பார்த்தாலும் இப்பொழுது அது அனுஷ்டித்துக்கொண்டுவரும் கொள்கைகளைக் கொண்டு பார்த்தாலும், நம் மக்களுக்கு சேவை செய்யவேண்டுமென்றும், ஜனநாயகத்திற்காகப் பாடுபடவேண்டுமென்றும் கருத்துடைய எந்தக் கட்சியும், காங்கிரசுடன் கூட்டணி வகுப்பதைப்பற்றி சிந்திக்கவும்கூட முடியாது. அதுபோலவே, அத்தகைய ஒரு கூட்டணியால் வகுப்புவாதப் பிற்போக்காளர்களை எதிர்த்துப்போராட முடியுமென்று யாராவது நினைத்தால் அதுவும் முற்றிலும் தவறு. ஏனெனில், இன்றைய சர்க்காருடைய ஜன-விரோத, ஜனநாயக-விரோதக் கொள்கைகளிலிருந்துதான் வகுப்புவாதப் பிற்போக்காளர்களுக்கு ஊக்கம் ஏற்படுகிறது. ஆகவே ஒரே சமயத்தில் காங்கிரஸ் சர்க்காரின் பிற்போக்கான கொள்கைகளை எதிர்த்துப் போராடி, அவைகளைத் தோற்கடிக்காமல், வகுப்புவாத பிற்போக்காளர்களை வெற்றிகரமாக எதிர்த்துப் போராடமுடியாது.

பல தொழிற்சங்கங்கள் ஏற்கனவே தொழில் வளர்ச்சியைப் பற்றிய திட்டங்களை வகுத்துள்ளன. அவைகளை நடைமுறைக்குக் கொண்டுவருவது தொழில் வளர்ச்சிக்கு உதவி செய்யும். சகல தொழில்கள் விஷயத்திலும் இதைச் செய்யவேண்டியது அவசியம். இந்த திட்டங்களை மேலும் ஸ்தூலமாக்கி, தொழிலாளிகளிடையிலும், பொதுமக்களிடையிலும் அவற்றை தீவிரமாகப் பிரபலப்படுத்த வேண்டியது அவசியமாகும்.

26. கடந்த ஒரு வருடகால அனுபவம் நமக்குக் காட்டியதென்ன? பொதுமக்களின் பிரஜா சுதந்திரங்கள், ஜனநாயக உரிமைகள் ஆகியவற்றின்மீது மிருகத்தனமான ஒரு தாக்குதல் நடத்தாமல் ஆளும் வர்க்கங்கள் நெருக்கடியின் சுமையை மக்களின் தோள்மீது சுமத்த முடியாது என்பதே.

காங்கிரஸில் இன்றுள்ள மிகவும் பிற்போக்கான நபர்களும், உறுப்பினர்களும் இதைத்தான் செய்யவேண்டுமென்று வற்புறுத்துகின்றனர். இவர்களில் பலர் வகுப்புவாதப் பிற்போக்காளர்களுக்கு ஆதரவாயிருக்கின்றனர். மக்களின்மீது தீவிரத் தாக்குதல் தொடுப்பதற்கும், வெகுஜன ஸ்தாபனங்களையும், கம்யூனிஸ்ட் கட்சியையும் ஒடுக்கி விடுவதற்காகவும், அவர்களுடன் காங்கிரஸ் ஐக்கிய முன்னணி ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று இந்தப் பகுதியினர் விரும்பு

கின்றனர். ஆகவே, பிரஜா உரிமைகளைப் பாதுகாப்பதற்கும், சர்க்காரின் அடக்குமுறைச் சட்டங்களை எதிர்த்தும், தொழிலாளருக்கு விரோதமான நடவடிக்கைகளை ஒழித்துக்கட்டுவதற்கும் நடத்தும் போராட்டம் இன்றைய நிலையில் மிகப்பெரிய முக்யத்வம் பெறுகிறது.

27. இன்றைய நிலைமையைப்பற்றிக் கொண்டுள்ள சகலவித திருப்தி மனப்பான்மையையும் கைவிட்டாகவேண்டும். வெகுஜன இயக்கத்தை வளர்ப்பது பற்றிய தவறான கருத்துக்களையெல்லாம் கைவிட்டுவிடவேண்டும். ஏற்கனவே குறிப்பிட்டதுபோன்று, சமீப மாதங்களில் எண்ணற்ற போராட்டங்கள் நடைபெற்றுள்ளன. ஆனால் அவைகளின்மீது மாத்திரம் கவனத்தைத் திருப்புவதானது, பெரிய போராட்டங்களை உதாரணமாக எடுத்துக்காட்டி, அவைகளையெல்லாம் ஒன்றாக சேர்த்து, அதனடிப்படையில், வெகுஜன இயக்கம் ஏற்கனவே தேசமெங்கும் விரிவடைந்துள்ளது, ஏற்கனவே ஒரு உயர்ந்த கட்டத்தை அடைந்து விட்டது என்று கூறுவது தவறாகும். அத்தகைய முறைகள் தவறான முடிவுகளுக்கும், தவறான நடைமுறைத் தந்திரங்களுக்கும் கொண்டுபோய்விடும். தனிப்பட்ட போராட்டங்கள், ஸ்ட்ரைக்குகள், ஆர்ப்பாட்டங்கள், அல்லது இந்தப் போராட்டங்களில் கலந்துகொள்பவர்களின் எண்ணிக்கை—ஆகிய இதைக்கொண்டு மாத்திரம் வெகுஜன இயக்கத்தின் வளர்ச்சியை அளந்துவிட முடியாது. மக்களின் நிலைமை மோசமடைய மோசமடைய, நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் போராட்டங்கள் வெடிக்கும் என்பது வாஸ்தவம்தான். ஆனால் இந்தத் தனித்தனிப் போராட்டங்களெல்லாம் ஒன்றுபடுத்தப்பட வேண்டும். ஜனநாயகப் பகுதிகளையெல்லாம் பரந்த ரீதியில் ஆதரவாகத் திரட்டும் முறையிலும் தீவிரமாகவும் இந்தப் போராட்டங்களெல்லாம் நடத்தப்படவேண்டும்; அந்த அடிப்படையில் ஐக்கிய வெகுஜன ஸ்தாபனங்களைக் கட்ட வேண்டும். சர்க்காரின் கொள்கைகளை மாற்றுவதற்காக தேசம் பூராவிலும் வளர்ச்சியடைந்துவரும் போராட்டத்தின் ஒரு பகுதியாக அது மாறும் ரீதியில் அவைகளுக்குத் தலைமைதாங்கி நடத்த வேண்டும். இவ்வாறெல்லாம் செய்யாவிட்டால், வெகுஜன இயக்கம் ஒட்டுமொத்தமாக பலஹீனமாகவேயிருக்கும். பொருளாதார நெருக்கடி வளரவளர, அரசியல் நெருக்கடியும் வளரவளர, இன்றைய சர்க்காரை அப்புறப்படுத்தி, ஒரு ஐக்கிய ஜனநாயக முன்னணி சர்க்காரை ஏற்படுத்துவதென்ற பிரச்னை, மேலும் மேலும் அதிக முக்யத்வம் பெறும். இந்த திருஷ்டிதான் இன்றையதினம் நம்முடைய எல்லா நடவடிக்கையிலும் நமக்கு வழிகாட்ட வேண்டும்.

28. காங்கிரசின் வெகுஜன அடிப்படை பலஹீனமடைந்து வந்தபோதிலும், காங்கிரசுக்கு இன்றும் மிகப்பெரிய செல்வாக்கு இருக்கிறது: நாடுபூராவிலுமே மிகவும் சக்திவாய்ந்த அரசியல் ஸ்தாபமாக அது இருந்து வருகிறது. நம்முடைய தீர்மானமான செல்வாக்கு

இன்னும் குறிப்பிட்ட பிரதேசங்களில்தானிருக்கிறது. தொழிலாளி வர்க்கத்தினிடையிலே, குறிப்பாக பெரிய தொழில்களிலே நம்முடைய நிலைமை இன்னும் பலஹீனமாகத்தான் இருக்கிறது. வெகுஜன ஸ்தாபனங்கள் முன்பிருந்ததைவிட பலம் பொருந்தியவைகளாக இருந்தபோதிலும, இன்னும் போதிய அளவு பலம் பொருந்தியவைகளாகவும், எல்லா இடங்களிலும் பரவியதாகவும் இல்லை. ஒரு பலம் பொருந்திய ஜனநாயக அணியைக் கட்டும் வேலை இன்னும் முடிந்துவிடவில்லை. ஜனநாயக இயக்கத்தை ஒன்றுபடுத்தக்கூடிய பொறுப்பையும், அதற்குத் தலைமை தாங்கக்கூடிய பங்கையும் சரியாக நிறைவேற்ற முடியாமல் கட்சியைத் தடைசெய்கிற பலஹீனங்களைப் போக்கியாக வேண்டும். ஆகவே, பொருளாதார நெருக்கடி ஆழமாவதினாலும், மக்களின் நிலைமை மோசமாவதினாலும் மட்டும் ஒரு பலம் பொருந்திய வெகுஜன இயக்கம் ஏற்பட்டுவிடுமென்று நினைப்பது ஒரு ஆபத்தான பிரமையாகும்.

29. **ஜனநாயக முன்னணியைக் கட்டியமைப்பது, வெகுஜன ஸ்தாபனங்களைக் கட்டுவது, கட்சியைக் கட்டுவது** ஆகிய இந்த மூன்று கடமைகளும் பிரிக்கப்பட முடியாதவாறு ஒன்றோடொன்று இணைந்துள்ளன. ஜனநாயக இயக்கம் வெற்றியடைவது, இது எவ்வளவுதூரம் நிறைவேற்றப்படுகிறது என்பதைப் பொறுத்துத்தான் இருக்கிறது. இந்தக் கடமைகள் ஒன்றுடனொன்று இணைக்கப்பட்டு, மூன்றும் ஒரு வேலையின் மூன்று பகுதிகளென்ற முறையில்-எந்த அளவிற்கு நிறைவேற்றப்படுகின்றனவோ, அந்த அளவிற்கு, நெருக்கடியின் சுமையை மக்களின் தோல்விகளின்மீது போடுவதும் தோற்கடிக்கப்படும்; வெகுஜன இயக்கம் வளரும்; அதனுடைய லட்சியத்தையும் அடையும்.

30. மக்களின்மீது சுமை அதிகரித்துவருவது, அவர்களின் வாழ்க்கை நிலைமை மோசமாவது, தேசியத்துறையிலும், சர்வதேசியத்துறையிலும், சர்க்காரின் கொள்கைகள் மேலும்மேலும் ஜனவிரோதக் கொள்கைகளாக ஆவது, வெகுஜன எதிர்ப்பதை, வகுப்புவாதப் பிற்போக்காளர்கள் பிளவுபடுத்தும் நோக்கங்களுக்காக உபயோகப்படுத்த முயற்சிப்பது, ஆகிய இவைகளின் காரணமாக, சகல ஜனநாயக கட்சிகளும், முற்போக்குக் கட்சிகளும், தனிநபர்களும் ஒன்றுபடவேண்டியது அத்தியாவசியமாகிறது. அத்தகைய ஒற்றுமை ஏற்படுவதற்கான சந்தர்ப்பங்கள் இன்று நிறைய இருக்கின்றன. இந்த சாத்யானுகூலங்களையெல்லாம் யதார்த்தமாக்குவதே இன்று கம்யூனிஸ்ட் கட்சியின் கேந்திரமான கடமையாகும். இதை நிறைவேற்றுவதற்கு நாம் நம்மிடமுள்ள செக்டேரியன் கண்ணோட்டத்தையும், செக்டேரியன் முறைகளையும் கைவிடவேண்டும். நம்முடைய கோஷங்கள், நம் கட்சியைச் சேராத இதர தனிநபர்களிடம் நாம் கடைப்பிடிக்கும் போக்கு, வெகுஜன ஸ்தாபனங்கள் ஜனநாய ஸ்தாபனங்கள் ஆகியவைகளை நடத்தும் முறை ஆகியவற்றில் நாம் செக்டேரி

யன் கொள்கைகளையும், முறைகளையும் கைவிடவேண்டும். கம்யூனிஸ்ட் கட்சி நாட்டின் அரசியல் வாழ்க்கையில் மிகவும் கேந்திரமான ஸ்தானத்தை வகிக்கிறது. காங்கிரசை எதிர்ப்பதற்கு மிகவும் சக்திமிக்க எதிர்க்கட்சி இதுதான் என்று நம் மக்கள் கருதுகிறார்கள். மக்களின் சகல பகுதியினரையும் ஒன்றுபடுத்தும் சக்தியாகக் கட்சி இயங்கவேண்டுமென அவர்கள் விரும்புகிறார்கள். எல்லா ஜனநாயக சக்திகளும் ஒன்றுபட வேண்டுமென்றும், தங்களின் உரிமைகளையும், கோரிக்கைகளையும் பாதுகாப்பதற்காக ஒன்றுபட்டுப் போராடவேண்டுமென்றும் மக்கள் விரும்புகிறார்கள். ஒரு குறுகிய வரையறைக்குட்பட்டிருந்த போதிலும், ஐக்கிய முன்னணியின் செல்வாக்கு மக்களிடையே மின்விசைபோல பாய்ந்து சென்றதை தேர்தல்கள் நிரூபிக்கின்றன. தேர்தலுக்குப் பின்னால் ஐக்கிய முன்னணி பலஹீனமடைந்துள்ள பிரதேசங்களிலும், இதர எல்லா பிரதேசங்களிலும் எதிர்க்கட்சிகளிடையே ஐக்ய முன்னணியைக் கட்டி வளர்ப்பதற்காக சகல முயற்சிகளும் செய்யப்படவேண்டும். மேலும், ஐக்கிய முன்னணியைக் கட்டி வளர்க்க வேண்டுமென்றால், பெரும்பகுதி காங்கிரஸ்காரர்களையும், பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியைப் பின்பற்றும் மக்களையும், முற்போக்கு தனிநபர்களையும், போராட்டங்களிலும், பொது நடவடிக்கைகளிலும் கொஞ்சம் கொஞ்சமாக இழுத்து ஈடுபடுத்த வேண்டியிருக்கும். ஆனால் இந்தத் துறையில் செய்யப்பட்ட வேலை மிகவும் சொற்பம். நம்முடைய எல்லா கோஷங்களையும் ஆதரிக்காதவர்களையும் அல்லது நம்மால் நடத்தப்படும் நடவடிக்கைகளில்பங்கெடுத்துக்கொள்ளாதவர்களையும் பிற்போக்காளர்களாகக் கருதும் கண்ணோட்டம்; மக்களுக்கு சேவை செய்து அவர்களின் கஷ்டங்களை நிவர்த்திக்க விரும்பும் அனைவரும் ஈடுபடுவதற்கு சாத்தியமான நடவடிக்கை ரூபங்களை அனுஷ்டியாதிருத்தல்; மாறுபட்ட அரசியல் கருத்துக்கள் இருந்தபோதிலும், உடனடியான ஒற்றுமையைக் கட்டுவதற்கு சாதகமான ஸ்தூலப் பிரச்னைகளைப் புறக்கணித்தல்—இந்த எல்லாப் போக்குகளும் ஒவ்வொரு மாகாணத்திலும். ஒவ்வொரு பிரதேசத்திலும் இன்னும் நீடிக்கின்றன. விரிவான ஐக்கிய முன்னணி இயக்கத்தைக் கட்டி வளர்க்க இவை குந்தகம் செய்கின்றன.

31. நமது பிரசாரக் கிளர்ச்சி ஸ்தூலமாகயில்லை. திட்டவட்டமாக அம்பலப்படுத்துவதற்கு பதிலாக, பொதுவான வார்த்தைகளில் மட்டுமே நாம் தாக்குகிறோம். சட்டசபைகளிலும், பார்லிமெண்டுகளிலும், பொதுக் கூட்டங்களிலும் அடிக்கடி புளித்துப்போன ஒரே மாதிரியான பிரசங்கங்களைத்தான் செய்கிறோம். நம் பத்திரிகைகளில் எழுதுவதும் ஒரே மாதிரியான சலித்துப் போன முறையில்தான். மக்கள் இயக்கத்தை விரிவுபடுத்துவதின் மூலம் ஐக்கிய அணியைக் கட்டி வளர்க்கும் வேலை இம் முறைகளினால் குந்தகப்படுகிறது. இன்றைய சர்க்கார் ஒரு பிற்

போக்கு சர்க்கார் என்று ஏற்கனவே திடமாக நம்பிக்கொண்டிருக்கும் மக்களுக்காக மட்டுமே நாம் அடிக்கடி பேசுகிறோம். பொதுமக்களின் கஷ்டங்களை ஓரளவாவது நிவர்த்திக்கவும், அவர்களுக்குச் சலுகைகள் வாங்கித் தரவும் இன்று அமுலிலுள்ள குத்தகை வாரச் சட்டம், சமூக பந்தோபஸ்து சட்டம், சம்பளப் பட்டுவாடா சட்டம் போன்ற சட்டங்களை உபயோகப்படுத்திக்கொள்ள நாம் அடிக்கடி தவறுகிறோம். மக்களின் போராட்டங்களின் நிர்ப்பந்தத்தினால்தான் இந்தச் சட்டங்கள் அனைத்தும் நிறைவேற்றப்பட்டன வென்பதையும், மக்களின் கையில் இவை ஒரு ஆயுதம் என்பதையும், நாம் மறந்துவிடுகிறோம். மக்கள்படும் கஷ்டங்களை மட்டும் எடுத்துக்கூறுவது, அவர்களின் போராட்டங்களின்மூலம் கிடைத்த வெற்றிகளைப் புறக்கணிப்பதெனும்போக்கு அடிக்கடி ஏற்படுகிறது. இத்தகைய வெற்றிகளைக் குறிப்பிடுவதன் மூலம், "சீர்திருத்தவாத பிரமைகள்" தலை தூக்கும் என்ற தவறான எண்ணம் அடிக்கடி ஏற்படுகிறது. ஆனால், நடைமுறை உண்மை இதற்கு நேர்மாறானது. மக்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்துவதற்காக, ஒற்றுமையும் போராட்டமும் கோரிக்கைளைப் பெற முடியும் என்ற நம்பிக்கையை ஊட்டுவதற்காக மக்களின் போராட்டங்களின் மூலம் கிடைத்த வெற்றிகளுக்கு, அவை எவ்வளவு சிறியவையாக யிருந்தபோதிலும், மிகவும் விரிவான விளம்பரமும் முக்கியத்துவமும் அளிக்கவேண்டியது மிகவும் அவசியம். மேற்கொண்டு முன்னேறுவதற்கு இதை அடிப்படையாகக்கொள்ளவேண்டியதும் அவசியம். முதியோர் கல்வி, கலை-கலாச்சார நடவடிக்கைகள், உடற்பயிற்சி, கூட்டுறவு, வைத்திய உதவிபோன்ற வேலைகளின் பால் மிகவும் அற்பசொற்பமான கவனத்தைச் செலுத்தும் போக்கு கூட இருக்கிறது. இத்தகைய வேலைகள் மிகவும் அத்தியாவசியம். இதன்மூலம், பல்வேறுபகுதியினரையும்ஒன்றுதிரட்டமுடியும். இதன் மூலம் கட்சியும், வெகுஜன ஸ்தாபனங்களும் மக்களுடன் மிக நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளுவதும் சாத்தியமாகும். நம் கட்சி இன்று மிகவும் பலம் வாய்ந்திருக்கும் திரிபுராவில், இத்தகைய முதியோர்க்கல்வி இயக்கத்தின் மூலம்தான் நம் கட்சி ஆரம்ப தசையில் மிகப்பெரிய வளர்ச்சியடைந்தது என்பதும் அடிக்கடி மறக்கப்படுகிறது. இதேபோன்று, மலபாரிலும் கட்சி வளர்ச்சியிலும், விவசாய இயக்கத்தின் வளர்ச்சியிலும் முதியோர்க்கல்வி இயக்கம் பெரும்பங்கு வகித்தது.

பஞ்ச நிலைமைகள் பரவியிருக்கும் பிரதேசங்களில், சர்க்காரிடமிருந்து நிவாரண உதவி கோருவதும், ஜனநாயக ஸ்தாபனங்களின் ஒற்றுமையின் அடிப்படையில் நிவாரண வேலைகளைச் செய்வதும் மிகவும் அவசியம். ஆனால் இதுமட்டுமன்றி, கிணறுகளைத் தோண்டுதல், குளம் கண்மாய்களை மராமத்து செய்தல் போன்ற வேலைகளுக்கு மக்களை ஒன்றுதிரட்ட வேண்டியதும் மிகவும் அத்தியாவசியமாகும்.

ஒவ்வொரு ராஜ்யத்திலும் சர்க்காரால் அமுல் நடத்தப்படும் திட்டங்களையும், அணைக்கட்டுகளையும் விமர்சனக் கண்ணுடன் பரிசீலித்து, அவைகளைத் திட்டவட்டமாக, புள்ளி விவரங்களுடன் அந்தந்த மாகாணக் கமிட்டிகள் அம்பலப்படுத்தவேண்டும். மக்களுக்கு உண்மையிலேயே நன்மை பயக்கக்கூடிய அணைக்கட்டுத் திட்டங்களை முன்வைத்து, அவைகளை அமுல் நடத்துவதற்காக மக்களை ஒன்று திரட்டவேண்டும்.

பல்வேறு சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தபோதிலும், இன்றும் கூட தீண்டப்படாத மக்களுக்கு - நடைமுறையில் சம உரிமைகள் மறுக்கப்படுகின்றன என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும். பல கட்சி யூனிட்டுகள் இதுவரை இப்பிரச்சினையில் சரியான கவனம் செலுத்தவில்லை. தீண்டாமைக்கு எதிராக மிகவும், விரிவான சட்டங்களை இயற்றவேண்டுமென்று கிளர்ச்சி செய்வது மட்டும் போதாது. ஆனால், எல்லா விதமான பாகுபாடுகளையும் எதிர்த்து திட்டவட்டமான போராட்டத்தை நடத்த வேண்டியதும் அத்தியாவசியமாகும்.

32. மகஜர்கள், கையெழுத்து இயக்கம், வேலைநிறுத்தங்கள், ஹர்த்தால்கள், ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள், ஒத்துழையாமை முதலிய பல்வேறு போராட்ட ரூபங்களின் மூலம் மக்களின் உடனடியான கோரிக்கைகளையடைவதற்காகவும், சர்க்கார், நிலப்பிரபுக்கள், ஏகபோக முதலாளிகளின் தாக்குதல்களை எதிர்த்தும் போராட்டங்கள் நடத்தப்பட வேண்டும். இன்று வெகுஜன இயக்கத்தை எதிர்நோக்கியுள்ள மிக முக்கியமான கடமைகள் இவைதான். ஜனநாயக முன்னணியைக் கட்டி வளர்ப்பதற்கு மிகவும் சக்திமிக்க ஆயுதமும் இவைதான். மக்களிடையே நன்கு வேரூன்றிப் போயுள்ள கிளை யூனிட்டுகளுடன் கூடிய வெகுஜன ஸ்தாபனங்களை போராட்டங்களின்மூலம் கட்டியமைக்கவேண்டும். இந்தப் போராட்டங்களிலே நன்கு பயிற்சிபெற்று புடம்போட்டெடுக்கப்பட்ட ஊழியர்கள், மக்களிடையேயிருந்து தோன்றுவார்கள்.

கிராமப்புறங்களில் நிலைமை வெகு வேகமாக மோசமாகிக் கொண்டுவருகிறது. பெரும் போராட்டங்கள் இங்கு உருவாகிக் கொண்டிருக்கின்றன. எனவே, விவசாய சங்கங்களைப் பலப்படுத்தவும், எங்கெங்கெல்லாம் அவசியமோ அங்கங்கெல்லாம் விவசாயத் தொழிலாளர் ஸ்தாபனங்களை ஏற்படுத்தவும் உடனடியாக மாகாணக் கமிட்டிகள் மிகவும் தீவிரமான கவனத்தைச் செலுத்தவேண்டியது அவசியம். நிலவெளியேற்றத்தை எதிர்த்து, அக்கிரமமான வரிகளையெதிர்த்து, குத்தகைக் குறைப்பிற்காகவும், கடன் ஒத்திவைப்புக்காகவும், போதுமான கூலிக்காகவும், பஞ்சம், வறட்சிக்கெதிராக நிவாரணம் கோரியும், விவசாய உற்பத்திப் பண்டங்களுக்கு நியாய விலைக்காகவும், குறிப்பிட்ட அணைக்கட்டு திட்டம்போன்ற கோரிக்கைக

ளுக்காகவும் நடைமுறை இயக்கத்தின் மூலம் விரிவான விவசாய ஒற்றுமையைக் கட்டி வளர்க்கவேண்டும்.

தொழிலாள வர்க்கப் போராட்டங்கள், குறிப்பாக ஏகபோக முதலாளிகளின் தாக்குதலை எதிர்த்து பிரதானமான தொழில்களில் நடக்கும் போராட்டங்கள் இன்றைய சூழ் நிலைமையில் அதிகரித்த முக்கியத்துவத்தை அடைகின்றன. தன்னுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்காகத் தொழிலாள வர்க்கம் நடத்தும் தீவிரமான போராட்டம், ஆட்குறைப்பு, சம்பளவெட்டு, முதலிய தாக்குதல்களை எதிர்த்து தொழிலாள வர்க்கம் நடத்தும் வீரதீரமான போராட்டங்கள், எல்லா வர்க்கங்களையும் பகுதிகளையும் தங்கள் சொந்த போராட்டங்களை உறுதியாகவும், ஊக்கமுடனும் நடத்துவதற்கு தைரியமூட்டுகின்றன. பல மாகாணங்களில் நாம் ஏற்கனவே கண்டிருப்பதைப்போல, நாளுக்குநாள் தீவிரமாகி முன்னேறிவரும் மக்கள் இயக்கத்திற்கு தொழிலாள வர்க்கம் கடைப்பிடிக்கும் வெகுஜன நடவடிக்கை திட்டவட்டமான ரூபத்தையும், பாதையையும் காண்பிக்கிறது. ஜனநாயக முன்னணியை அமைப்பதற்கு இது மிகவும் சக்திமிக்க ஆயுதமாகும்.

தொழிலாளர் அரங்கில் சமீபகாலத்தில் போராட்டங்கள் வெடித்துப் பரவிக்கொண்டிருந்தபோதிலும், தொழிலாளர்களிடையே ஒற்றுமையுணர்ச்சி வளர்ந்துவந்த போதிலும், ஒரே தொழிலில் ஒரே தொழிற்சாலையில் பல சங்கங்கள் இருப்பதன் காரணமாக தொழிற்சங்க இயக்கம் மலர்ந்து விரிவதற்குத் தடங்கல்கள் ஏற்படுகின்றன. தொழிற்சங்க ஒற்றுமைக்காகவும், " ஒரு தொழிலில் ஒரே சங்கம். மத்திய தொழிற்சங்க ஸ்தாபனம் ஒன்றேதான் இருக்கவேண்டும் " என்ற கோஷங்கள் வெற்றிபெறுவதற்காகவும் தீவிரமான போராட்டம் நடத்தவேண்டும். இன்று, அமுலிலுள்ள ஐக்கிய பேக்டரி கமிட்டிகளை பலப்படுத்தவேண்டும். இத்தகைய பேக்டரி கமிட்டிகளை மேலும் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் ஏற்படுத்தவேண்டும். மீண்டும் மீண்டும் வெடித்துக் கிளம்பிக்கொண்டிருக்கும் போராட்டங்களில், சர்க்காரின், முதலாளிகளின் தாக்குதலை ஒன்றுபட்டு எதிர்ப்பது என்ற பிரச்னை முன்னணிக்கு வரும். போராட்டங்களையும் பேச்சுவார்த்தைகளையும் நடத்துவதற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட கூட்டுக் கமிட்டிகளை நிறுவி இத்தகைய சந்தர்ப்பங்களைப் பூர்ணமாகப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும். சங்கங்களை அங்கீகாரம் செய்வது எனும் பிரச்னை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இதற்காகத் தீவிரமாகப் போராடியாகவேண்டும். தொழிற்சங்கங்களை அங்கீகாரம் செய்யவேண்டும் எனும் போராட்டத்தின் ஒரு பகுதியாக பம்பாய், மத்திய பாரத், மத்திய பிரதேஷ் முதலிய ராஜ்யங்களில் நிறைவேற்றப்பட்டுள்ள தொழில் உறவு சட்டங்களை எதிர்த்து நடத்தும் போராட்டம் அமைந்திருக்கிறது. பொதுவாக தேசம் பூராவிலும்,

குறிப்பாக இந்த ராஜ்யங்களிலும் இந்த சட்டங்களை எதிர்த்து விரிவான இயக்கத்தைக் கட்டி வளர்ப்பது, இன்று தொழிலாள வர்க்கத்திற்கு முன்னுள்ள பிரதானமான கடமையாகும்.

தொழில் கேந்திரமான பிரதேசங்களில் உயிர்நாடி போன்ற முக்கியமான தொழிற்சாலைகளைப் புறக்கணித்துவிட்டு, சிதறிக் கிடக்கும் சின்னஞ்சிறு தொழிற்சாலைகளிலே மட்டும் கவனம் பூராவையும் செலுத்தும் போக்கு பரவலாக எல்லா இடங்களிலும் இருக்கிறது. இந்தப் போக்கைக் கைவிடவேண்டும். திட்டமிட்டு உடனடியாக கட்சி யூனிட்டுகள் பிரதானமாக முக்கிய தொழிற்சாலைகளில் தீவிர வேலையை ஆரம்பிக்கவேண்டும்.

ஆயிரக்கணக்கில் ஆட்குறைப்பு செய்வதை எதிர்த்துப் போராடும் பிரச்னை, இன்று தொழிலாள வர்க்கத்தின் கேந்திரமான பிரச்னையாகிவிட்டது. ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள், கூட்டங்கள், மகாநாடுகள், ஹர்த்தால்கள், வேலைநிறுத்தங்கள் மூலம் விரிவான இயக்கத்தைக் கட்டிவளர்ப்பது மிக முக்கியமான கடமையாகும். ஆட்குறைப்பையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் எதிர்த்துப் போராடுவதற்காக ஐக்கிய கமிட்டிகளை நிறுவவேண்டும். தொழிற்சாலைகளில் ஸ்தாபனரீதியாக ஒன்றுதிரண்ட தொழிலாள வர்க்கத்தையும் இந்த இயக்கத்தில் ஈடுபடுத்தாவிடில், ஒரு விரிவான இயக்கம் மலருவது சாத்தியமில்லை. தொழிலாளர்களை ஒன்றுதிரட்டுவதுடன், நிவாரண உதவி இயக்கமும், ஒற்றுமை இயக்கமும் கட்டியமைக்கவேண்டியதும் மிகவும் முக்கியமானது.

இந்த இயக்கங்களிலும், போராட்டங்களிலும் தொழிலாளவர்க்கத்திற்கு அரசியல் தன்னுணர்வைத் திட்டவட்டமாக நன்கு புகுத்த வேண்டும். அதனுடைய தலைமைப்பாத்திரத்தைத் தெளிவாக அறிவுறுத்தவேண்டும். இதன்மூலம், விவசாயிகள், மாணவர்கள், வியாபாரிகள், தொழிலதிபர்கள் முதலிய மக்களின் பல்வேறு பகுதியினர் தங்கள் கோரிக்கைகளுக்காகப் போராடும்பொழுது, அதற்கு ஆதரவாக தொழிலாளவர்க்கம் செயலில் இறங்குவது சாத்தியமாகும். வெகுஜன ஒற்றுமையை இது கட்டி வளர்க்கும். தொழிலாளர்களின் போராட்டங்களையும், இதர வர்க்கங்களின் போராட்டங்களையும் தனித்தனியாக நசுக்கி அழிப்பதற்கு சர்க்கார் செய்யும் முயற்சிகளை இது தோற்கடிக்கும்.

33. ஒவ்வொரு போராட்டத்தையும், ஒவ்வொரு இயக்கத்தையும், ஒவ்வொரு வெகுஜன நடவடிக்கையையும் மக்களிடையே கோஷங்களைப் பரப்புவதற்குமட்டும் உபயோகப்படுத்தக்கூடாது. எல்லாவற்றிற்கும் மேலாக, தொழிலாளர்கள். விவசாயிகள், மாணவர்கள், வாலிபர்கள், மாதர்கள் முதலியோரின் ஸ்தாபனங்களைக் கட்டி வளர்க்க இவைகளை உபயோகப்படுத்தவேண்டும். வெகுஜன ஸ்தாபனங்கள் மிகவும் பலஹீனமாயிருக்கின்றன. பல

இடங்களில் ஸதாபனங்களேயில்லை. மக்களிடையே பரவி வளர்ந்திருக்கும் அதிருப்திக்கு ஒத்தவாறு மக்கள் இயக்கமும் முன்னேறிச் செல்லாமல் பின்தங்கி யிருப்பதற்கு இந்த ஸ்தாபன பலஹீனம் மிக முக்கியமான காரணங்களில் ஒன்றாகும் என்பதை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். வெகுஜன ஐக்கிய ஸ்தாபனங்கள்தான் ஜனநாயக முன்னணியின் அடிப்படையாக அமைகின்றன என்பதையும் தேசம் பூராவும் இத்தகைய வெகுஜன ஸ்தாபனங்களைக் கட்டிவளர்க்காமல் தேசரீதியான வெகுஜன இயக்கத்தைக் கட்டி வளர்ப்பதும் சாத்தியமில்லை என்பதையும் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

கடந்த காலத்தில் பேக்டரி கமிட்டிகள், கிராம விவசாய சங்கங்கள் போன்ற அடிப்படையான யூனிட்டுகளில் இருந்த பலஹீனம், தொழிலாளர், விவசாயி, இதர வர்க்க ஸ்தாபனங்களின் கேந்திரமான பலஹீனமாக விளங்கியது. வெகுஜன ஸ்தாபனங்களின் பலம் அதன் மொத்த அங்கத்தினர் தொகையின்மீது மட்டும் சார்ந்திருக்கவில்லை. ஆனால் எந்த முறையில் இந்த அங்கத்தினர் தொகை ஸ்தாபன ரீதியாகத் திரட்டப்பட்டுள்ளது என்றதின்மீதும், எல்லாவற்றிற்கும் மேலாக அடிப்படை யூனிட்டுகள் எவ்வளவு உறுதியாகவும், ஸ்தாபன ரீதியாக, இயங்கிக்கொண்டு இருக்கின்றன என்பதின் மீதும் இது சார்ந்திருக்கிறது. அடிப்படை யூனிட்டுகள் இவ்விதம் இயங்காவிடில், ஸ்தாபனத்தின் வெகுஜன அடிப்படையை விஸ்தரிக்கமுடியாது. இன்றுள்ள தளங்களைக்கூட செயல்முறையில் இயக்குவிக்க முடியாது. எனவே, இந்த வேலையில் நாம் கவனத்தைத் திருப்ப வேண்டும். சாதாரணத் தொழிலாளர்கள், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் முதலிய அனைவரையும் இந்த ஸ்தாபன ரீதியான வேலையில் இழுக்கவேண்டும்.

மேலும், கட்சிப் பத்திரிகைகள், புஸ்தகங்கள் விற்பனையை அதிகரிக்கும் வேலையுடன் போராட்ட, இயக்க வேலைகளையும் திட்டமிட்ட ரீதியில் ஒருமுகப்படுத்தவேண்டும். தற்சமயம், எல்லா மட்டங்களிலும், நம் கட்சியின் எல்லா யூனிட்டுகளிலும் இந்த வேலையின் முக்கியத்துவம் குறைத்து மதிப்பிடப்படுகிறது. 'ஸ்பான்டேனியடி' எனும் தத்துவத்தைப் பூஜிப்பதாலும், உணர்வின் பாத்திரத்தைக் குறைத்து மதிப்பிடுவதாலும் இந்தத் தவறான போக்கு ஏற்படுகிறது. பத்திரிகை, புஸ்தக விற்பனை கட்சி பூராவின், அதன் சகல யூனிட்டுகளின் வேலை என்று பார்க்காமல், விற்பனைப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ள ஒரு சில தோழர்களின் வேலை மட்டும்தான் இது என்று பார்ப்பதில்தான் இந்தத் தவறான போக்கு பிரதிபலிக்கிறது. இந்தப் போக்கைத் தீவிரமாக எதிர்த்துப் போராடவேண்டும்.

**34.** எல்லா ஜனநாயகப் பகுதிகளையும், கட்சிகளையும், குரூப்களையும், தனிநபர்களையும் ஒன்று திரட்டி ஒற்றுமைப்படுத்தும் உட

னடியான மாற்று கோஷங்களையும், கோரிக்கைகளையும் நம் கட்சி ஒவ்வொரு ராஜ்யத்திலும் முன்னணியில் வைக்கவேண்டும். இவை ஐக்கிய முன்னணியின் பொதுவான வேலைத்திட்டமாகத் திகழவேண்டும். அரசாங்கத்தின் சகல நடவடிக்கைகளிலும் நம் மக்கள் ஜனநாயகபூர்வமாகப் பங்கெடுத்துக்கொள்ளுவதற்கு உத்திரவாத மளிக்கவும், அவர்களின் ஆக்கபூர்வமான வேலைகளைக் கட்டவிழ்த்துவிடவும், இந்தப் பொதுவான வேலைத்திட்டம் எல்லா அடக்குமுறைச் சட்டங்களையும் ரத்துசெய்யவேண்டுமென்றும், எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யவேண்டுமென்றும் கோரவேண்டும். மேலும், மொழிவழி மாகாணங்களை உடனடியாக அமைத்தல், ராஜப்பிரமுகர் பதவியை ரத்துசெய்தல், மாஜி சமஸ்தான எல்லைகளை உடைத்து, அந்த சமஸ்தான பிரதேசங்களை மொழிவாரியாக அந்தந்த மொழி வழி ராஜ்யங்களுடன் இணைத்துவிடுதல், 'பி' பிரிவு, 'சி' பிரிவு ராஜ்யங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குப் பூரணமாக சட்டமியற்றும் அதிகாரமும், நிர்வாக அதிகாரமும் அளிப்பதன் மூலம் 'ஏ', 'பி', 'சி' பிரிவு ராஜ்யங்களுக்கிடையேயுள்ள எல்லா பாகுபாடுகளையும் அகற்றுதல், ராஜ்யங்களிலும், மத்திய பார்லிமெண்டிலும் உள்ள மேல் சபைகளை ரத்து செய்தல் முதலிய கோரிக்கைகளையும் வேலைத் திட்டங்களையும் முன்வைக்கவேண்டும்.

உள்நாட்டு சரக்குகளுடன் போட்டிபோடும் எல்லா சரக்குகளின் இறக்குமதியையும் தடைசெய்யவேண்டுமென்றும் வேலைத்திட்டம் கோரவேண்டும். அதிகபட்ச லாபம் $6\frac{1}{4}$ சதவிகிதம்தான் என்று வரையறுக்கவேண்டுமென நாம் கோரவேண்டும். காங்கிரசே இதை ஒப்புக்கொண்டுள்ளது. அன்னியக் கம்பெனிகள் தம்முடைய லாபத்தை மூட்டைகட்டி ஏற்றுமதி செய்வதைத் தடைசெய்ய வேண்டுமென்றும், சர்க்காரால் நிர்ணயம் செய்யப்படும் தொழிலில் அந்த லாபத்தை மீண்டும் முதலீடுசெய்யவேண்டுமென்றும் நாம் கோரவேண்டும். பாதுகாக்கப்பட்டுள்ள தொழில்களில் விலை, சம்பளம், லாபம் முதலியவற்றை நிர்ணயிக்கவேண்டும். எல்லா தொழில்களிலும், சட்டரீதியாகவே குறைந்தபட்ச சம்பளத்தை நிர்ணயிக்க வேண்டும். வேலையின்றியிருக்கும் தொழிலாளர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்ட நிவாரணம் அளிக்கவேண்டும். சோவியத் யூனியனுடனும், இதர ஜனநாயக தேசங்களுடனும் நீண்டகால வியாபார ஒப்பந்தங்களை நம் சர்க்கார் செய்துகொள்ளவேண்டுமென நாம் கோரவேண்டும்.

ஜமீந்தார்களுக்கும், ஜாகிர்தார்களுக்கும் தற்சமயம் அளிக்கப் பட்டுவரும் நஷ்டஈட்டை உடனடியாக நிறுத்தவேண்டுமென்று நாம் கோரவேண்டும். நிலப்பிரபுக்களுக்கு விவசாயிகள் கொடுக்கும் குத்தகையும், வாரமும் கணிசமான அளவு குறைக்கப்படவேண்டுமென்றும், நிலவெளியேற்றம் நிறுத்தப்படுவது மட்டுமின்றி, வெளியேற்றப்பட்ட

விவசாயிகளுக்கு மீண்டும் அதே நிலத்தை திருபபிக் கொடுக்கவேண்டு மென்றும், மீண்டும் சாகுபடி செய்ய நிலப்பிரபுக்களுக்கு உரிமையளிக் கக்கூடாதென்றும் நாம் கோரவேண்டும். விவசாயிகள் மீதுள்ளவரிப் பளு குறையவேண்டுமென்றும் நாம் கோரவேண்டும்.

இராணுவ செலவு 50 சதவிகிதம் குறைக்கப்பட வேண்டுமென் றும், பந்தோபஸ்து-நிர்வாக செலவுகளும் கணிசமான அளவு மத்திய சர்க்காரிலும், ராஜ்ய சர்க்கார்களிலும் குறைக்கப்பட வேண்டுமென் றும் வேலைத்திட்டம் கோரவேண்டும்.

நம் மக்களின் ஆக்க சக்தியை ஒன்று திரட்டுவதன்மூலமும், இந்திய இன்ஜினீயர்கள், தொழில் நிபுணர்கள், தொழிலாளர்களின் அறிவுத்திறனுக்கு ஆக்கமளிப்பதன் மூலமும் உடனடியாக பெரும் நீர்ப்பாசன திட்டங்களையும் அமுல் நடத்த வேண்டுமென்றும் நாம் கோரவேண்டும்.

35, சமாதானப் பிரச்சினையில் நம் கட்சி யூனிட்டுகள் சிரத்தை யுடன் சமீப காலத்தில் சற்று அக்கரை செலுத்தியபோதிலும், இந்தக் கடமையின் கேந்திரமான முக்கியத்துவம் இன்னும் குறைத்து மதிப் பிடப்படுகிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். சமாதானத் திற்குச் சாதகமான அபிப்பிராயம் இந்தியாவில் மிகவும் பலமாக இருப்பதாலும், சோவியத் யூனியன்மீதும், சீனாமீதும் இந்திய மக்கள் பரந்த அளவு அனுதாபம் கொண்டிருப்பதாலும், யுத்தம் மூண்டால் இந்தியா நடுநிலைமை வகிக்கும் என்று நேரு சர்க்கார் பகிரங்கமாக அறிவித்திருப்பதாலும், இந்தியாவும் யுத்தத்தில் இழுக்கப்படலாம் என்ற அபாயம் தீவிரமாக இல்லை என்ற நம்பிக்கை நம் மக்க ளிடையே பொதுவாகப் பரவியிருக்கிறது. இத்தகைய நம்பிக்கை மிகவும் தவறானது. தீவிரமான சர்வதேச நெருக்கடியின்போதோ, அல்லது அவர்களின் யுத்தத் திட்டங்கள் மேலும் ஒரு படி முன்னே றும்பொழுதோ ஏகாதிபத்தியவாதிகளும் அவர்களின் ஏஜென்டு களும் மூர்க்கத்தனமாகக் கடைப்பிடிக்கும் நடவடிக்கைகளைக் குறைத்து மதிப்பிடுவதால்தான் இத்தகைய நம்பிக்கை உண்டா கிறது. இதர விஷயங்களைப்போலவே இந்த விஷயத்திலும் 'ஸ்பான்டேனியடி' தத்துவத்தின்மீது ஆதாரப்பட்டிருந்தால் அது அழிவுக்கு அடிகோலுவதாகும். எனவே, சமாதானத்திற்காக இந்திய மக்கள் அனைவரையும் **செயல்முறையில்** ஒன்று திரட்டவேண்டும். ஸ்தாபனரீதியாக ஒன்றுதிரண்டுள்ள தொழிலாளவர்க்கத்தையும், விவசாயிகளையும், செயல்முறையில் ஒன்றுதிரட்டவேண்டும். நாடு பூராவும் பரந்து, விரிந்திருக்கும் சமாதான உணர்ச்சிகளை சக்திமிக்க ஒரு சமாதான **இயக்கமாக** உருவாக்கவேண்டும். நாடெங்கும் பின்னல் வலைபோல சமாதானக் கமிட்டிகளை நிறுவவேண்டும். இன்று நடை பெற்றுக்கொண்டிருக்கும் யுத்தங்களை நிறுத்தும்பொருட்டு, இந்தியா

ஆக்கபூர்வமாக செயலாற்றுவதற்காக இந்திய மக்களை ஒன்று திரட்ட வேண்டும்.

இதை நாம் செய்யத் தவறினோமானல், நம் சர்வதேசக் கடமைகளைச் செய்யத் தவறுவதுமட்டுமின்றி தேச நலனுக்கும், தேச கௌரவத்திற்கும் துரோகமிழைத்தவர்களுமாவோம்.

36. இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்குமிடையே நடைபெறும் வியாபாரத் தகராறுகளும், மோதுதல்களும், இந்தத் தேசங்களின்மீது தங்கள் பிடிப்பை மேலும் இறுக்கிக்கொள்ளுவதற்குத் தமக்கு சாதகமாக இருப்பதை ஏகாதிபத்தியவாதிகளும், பிற்போக்காளர்களும் மிகவும் நன்ருக அறிவார்கள். எனவே, இந்த இரண்டு தேசங்களுக்குமிடையேயுள்ள உறவுகளை மோசமாக்க தம்மால் ஆனவரை அவர்கள் முயற்சிக்கிருர்கள்.

ஏகாதிபத்தியவாதிகளின், காங்கிரசுக்குள்ளும், வெளியிலும் இருக்கும் நிலப்பிரபுக்களின் தடங்கல்களையும் மீறி இந்திய பாகிஸ்தான் வியாபார ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டிருப்பது முற்போக்குச் சக்திகளின் ஒரு வெற்றியாகும்.

இந்த ஒப்பந்தத்தைப் பாதுகாத்து மேலும் பலப்படுத்தவும், எல்லாத் துறைகளிலும் நம் இரு நாடுகளுக்கிடையே சமாதானபூர்வமான சௌஜன்ய உறவுகள் நிலவவும், இரு நாடுகளுக்கிடையே கலாச்சார உறவுகளைப் பரிமாறிக்கொள்ளவும், சுதந்திரமான போக்குவரவை அனுமதிக்கவும் நம் கட்சி முன்னணியில் நின்று போராட வேண்டும்; மிகவும் கண்காணிப்பாக இருக்க வேண்டும். இந்த வழியின் மூலமாகத்தான், சமாதானம், ஜனநாயகத்திற்கெதிரான ஏகாதிபத்திய சதிகளை எதிர்த்துப் போராடமுடியும்; பிற்போக்கு வகுப்புவாத சக்திகளை முறியடிக்க முடியும்; மக்களின் ஜனநாயக ஒற்றுமையைப் பாதுகாக்க முடியும்.

37. சட்டசபைகளிலும், பார்லிமென்டிலும் நம் தோழர்கள் செய்யும் வேலை வெகுஜன இயக்கத்தைப் பலப்படுத்தியிருக்கிறது. எனினும் வெளியில் நடக்கும் போராட்டங்கள் வெகுஜன இயக்கத்துடன் சட்டசபை வேலை சரிவர ஒருமுகப் படுத்தப்படாததால் இந்த வேலையில் குந்தக மேற்பட்டிருக்கிறது. வெளியிலிருக்கும் வெகுஜன இயக்கத்திற்கு நேரடியாக உதவியளிக்கும் முறையிலும், அதைப் பிரதிபலிக்கும் ரீதியிலும் நம் சட்டசபை வேலை இருக்கவேண்டும். அதற்குத் தகுந்தபடி, வெகுஜன இயக்கத்தின் பிரச்னைகளை நம் தேச மக்கள் சட்டசபைகளில் முன்னுக்கு வைப்பதின் மூலம் இந்த பலஹீனத்தை மிகவும் துரிதமாகப் போக்கவேண்டும். இதற்காக. சர்க்காரின் சட்ட, நிர்வாக நடவடிக்கைகளை திட்டவட்டமாக அம்பலப் படுத்துவது மட்டும் போதாது. மக்களின் மனதிலே கொதித்துக் கொந்தளித்துக் கொண்டிருக்கும் அன்றாடப் பிரச்னைகளைப் பற்றி, நாமே சட்ட சபையில் மசோதாக்களைக் கொண்டுசெல்ல

